# கல்கி

KALKI 28.7.1974 50 காசு

4.8.1974 சிறப்பிதழில்



ர.சு.நல்லபெருமாள் எழுதும்

## திருடர்கள்

அதிர்ச்சி அளிக்கும் நவீனம்

ஆரம்பம்

காயங்களால் தொற்று நோய் பரவக்கூடும்



# புதிய பாண்டு-எய்ட் பிராண்ட் டிரஸ்ஸிங்

## பயன்படுத்தி அவற்றைப் பாதுகாருங்கள். காயங்களை விரைவில் ஆற்ற இப்போது <u>மெர்க்கியூரோக்ரோம்</u> மருந்து கலக்கப்பட்டுள்ளது.




உங்கள் குழந்தைகளின் வாழ்வில் தூசியும் அழுக்கும் எங்கும் இடம் பெறுகின்றன. ஆனால் அவை இடம் பெறக் கூடாத இடம் ஒன்று உண்டு—அதுதான் திறந்த காயம்.

எல்லா சிறிய வெட்டுக் காயங்கள், கீறல்கள் மற்றும் சிராய்ப்புகளை ஆற்றுவதற்கு புதிய பாண்டு-எய்ட்* டிரஸ்ஸிங் உபயோகியுங்கள். இப்போது அதில் மெர்க்கியூரோக்ரோம் மருந்து கலக்கப் பட்டுள்ளது. இந்த நிரூபணமான ஆன்டிசெப்டிக் மருந்து பிளவுபட்ட சருமத்துக்கு இதமளித்து, காயங்களை ஆற்ற உதவுகிறது. புதிய பாண்டு-எய்ட்* டிரஸ்ஸிங் பயன்படுத்திப் பாதுகாப்பது விவேகமாகும்.

எப்பொழுதும் புதிய **பாண்டு-எய்ட்*** டிரஸ்ஸிங்குகள் கைவசமிருக்கட்டும்.

# மலர்களிலே அவள் மல்லிகை!




மலர்களின் ராணி, மல்லிகை! இளமைப் பூங்காவில் பூரிப்புடன் பூத்துக் குலுங்கும் இந்த இளமங்கை, அழகு ராணியாகத் திகழ்கிறாள். அந்த புத்தெழில் என்றுமே நிலைத்திட அவள் ஜெய் அழகு சாதன சோப் உபயோகிக்கிறாள். மல்லிகை மணம் வீசும் ஜெய் சோப் மேனியை மிருதுவாக்கி, பொன்னொளி வீசச் செய்கிறது.

மல்லிகை
மணம் கமழும்

**ஜெய்**

அழகுசாதன
சோப்

டாடா தயாரிப்பு

OBM.7002 TM



மணமகன்: ஸ்ரீ தியாகராஜனின் புதல்வன் சிரஞ்சீவி **ஸ்ரீ ராமச்சந்திரன்** சென்னை இந்தியன் ஓவர்சீஸ் பாங்கில் பணிபுரிபவர்.

மணமகள்: ஸ்ரீ பஞ்சாட்சரம் அவர்களின் புதல்வி சௌ. **நீலாயதாக்ஷி** சென்னை Tansi யில் பணிபுரிபவர். இவர்களது திருமணம் சென்னையில் 8-7-74 அன்று சிறப்பாக நடைபெற்றது.



ஏர்க்காடு, ஷேவராய்ஸ் ஹோட்டல் உரிமையாளர், உடையாப்பட்டி திரு என். ராமசாமி உடையார் அவர்கள் புதல்வன் திருநிறைச்செல்வன் **ஆர். ஜெகதீசனுக்கும்** கொழும்பு திரு ஆர்.ஏ. நடேசன் அவர்களின் புதல்வி திருநிறைச் செல்வி **மாலதிக்கும்** திருமணம் சென்னையில் சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கும் மாலையில் நடைபெற்ற வரவேற்புக்கும், உறவினர்களும், நண்பர்களும், நகரப்பிரமுகர்கள் பலரும் வருகை தந்து மணமக்களை வாழ்த்தினர்.

வாழ்க மணமக்கள்



# கல்கி

## இந்த இதழில்...

ஆனந்த, ஆடி 12 ★ ஜூலை 28, 1974

### ஆஹா, ஹஸாரே!

இந்திய கிரிக்கெட்டின் முடிசூடா மன்னர்களில் ஒருவரைப் பற்றிய ரசமான சம்பவங்கள்.

### ஓவர் லோட்!

பஸ்ஸில் மட்டும்தானா ஓவர் லோட்? வாழ்க்கையே இன்று 'ஓவர் லோ'டாகித் தான் விட்டது! மணிசேகரன் தரும் மணியான கதை.

### அரசியல் பொருளாதார அனர்த்தங்கள்!

நாட்டின் சுபிட்சத்துக்கு அரசியல் கலப்பற்ற பொருளாதாரக் கொள்கை தேவை.

— தலையங்கம்

### பொன்னியின் புதல்வர் பிறந்த கதை!

அமரர் கல்கியின் வாழ்க்கை வரலாறு நூல் உருவானது எப்படி? அதுவே ஒரு சுவையான கதை!

### அழகுள்ள இடத்தில்...

அழகு எல்லாருக்கும் இருக்கிறது. அதை நாலு பேர் உணர்கிற மாதிரி வெளிப்படுத்தவே ஓர் ஆற்றல் வேண்டும். கிளுகிளுப்பு ஏற்படுத்தும் இனிய சிறுகதை.

### ஃபாஷனுக்குத் தோஷமில்லை!

ஃபாஷன் தோன்றுவது எப்படி? யோசித்துப் பார்த்தால் சிரிப்புத்தான் வருகிறது!

SISTAS CB 4/73F/TAM



# உங்கள் வரவேற்பறைக்கு உயிரூட்ட உங்களுக்குத் தேவை தோண்ணூறே ரூபாய்!

எழில்மிகு, சின்னஞ்சிறு காயர் கம்பளங்கள், மெத்தென்று சுகம் தரும் கோல நவீன காயர் கம்பளங்கள். கண்ணைப் பறிக்கும் வண்ணங்கள், கருத்திலிடம் பெறும் டிசைன்கள். புதிய கலையழகு மிளிரும் நெசவு! வரவேற்பறைத் தரைக்கு வடிவழகு சேர்த்திடுவீர்... விருந்தினர் அறையிலே கோல எழில் கூட்டிடுவீர். காயரின் கண்பறிக்கும் கம்பள வகையிலே எதை வேண்டுமாயினும் வாங்கிடுவீர். கலையழகும் நவீன நாகரீக எழிலும் இணைத்து, எளிய அறையைக்கூட எற்றமுறச் செய்திடுவீர். விலை? கவலை வேண்டாம். மிகமிக நயமானது. சொல்லப் போனால் நம்பமுடியாத அளவு நயமானது.

காயர் கம்பளங்கள் நீடித்து உழைப்பவை, 100% பூச்சியரிக்காது. எளிதில் சுத்தம் செய்யத் தக்கவை.



## காயர்

பெரிய & சிறு கம்பளங்கள்
நயமான விலையிலே
நவீனக் கோலம்!

காயர் போர்டு, கொச்சி-682016

இன்றே காயர் வாங்குங்கள், ஷோரூம்கள்: பம்பாய், புது டில்லி, கல்கத்தா, சென்னை, பெங்களூர், கொச்சி, மதுரை, சந்திகர், புவனேஷ்வர் மற்றும் அனேக வியாபாரிகள்.

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா -- பாரதியார்



மலர் 33 -- இதழ் 52

# அரசியல் பொருளாதார அனர்த்தங்கள்!

ரேடியோவைத் திருப்பியதும் நாதசுர இசை கேட்டது. நாளிதழை எடுத்ததும் கட்டாய டெபாஸிட் திட்டம் பற்றிய எட்டுப் பத்தித் தலைப்பு கண்ணில் பட்டது! ஆக மேள தாளத்துடன் இந்திரா அம்மையாரின் பொருளாதார வதைப்புத் திட்டங்கள் அமுலாகின்றன எனலாம்!

கட்டாய டெபாஸிட் திட்டம் புதிதல்ல. மொரார்ஜி தேசாய் அமுல்படுத்தி மக்களின் அதிருப்தியை மட்டில்லாமல் சம்பாதித்துக் கொண்டார். வாபஸ் பெறப்பட்ட திட்டம் மீண்டும் வதைக்க வந்திருக்கிறது. அன்றைய நிலையை விட வரிகளும் வாழ்க்கைச் செலவுகளும் மிக உயர்ந்துள்ள இன்று இத்திட்டம் அளிக்கும் வேதனையும் மிக அதிகமாகத்தான் இருக்கும். பொறுத்துக்கொள்ளலாம், நாட்டுக்கு நன்மை என்றால். ஆனால் மொத்தம் புழக்கத்தில் உள்ள பணத்தில் ஒரு சதவீதத்துக்கும் குறைவாகவே கட்டாய டெபாஸிட்டினால் முடக்க முடியும் என்பதைப் பார்க்கும்போது நிகர லாபம் நாம் அடையும் துன்பம் மட்டுமே என்பது தெளிவாகிறது.

மாதச் சம்பளம் வாங்குகிறவர்களிடமிருந்து பணத்தை அட்டையாக உறிஞ்சுவது அரசுக்கு எளிதான காரியம். தொழில்நடத்திச் சம்பாதித்து, சரியாகக் கணக்குக் காட்டாமல் வரி விதிப்பிலிருந்து தப்புவோர், கறுப்புப் பணம் பண்ணுவோர் ஆகியோர் மீது நடவடிக்கை எடுக்கத் தெரியாமல் அரசு விழிக்கிறது.

கம்பெனிகள் டிவிடெண்ட் வழங்குவதில் விதிக்கப்பட்டுள்ள கட்டுப்பாடுகள் மிக மிக அநீதியானவை. பலவித கட்டாய டெபாஸிட் திட்டங்கள் மூலம் முடக்கப்படும் பணமாவது பின்னால் திரும்பி வரும் என்ற திருப்தி இருக்கிறது. ஆனால் இத்தனை சதவீதத்துக்கு மேல் டிவிடெண்ட் வழங்கக் கூடாது என்ற சட்டம் சிறிய, எளிய பங்குதாரர்களுக்குப் பேரிடி, பேரிழப்பு.

அதோடு கம்பெனிகளில் முதலீடு செய்கிற ஆர்வமும் இனி மக்களுக்கு இல்லாமல் போகும். முதலீடு இல்லையென்றால் தொழில் வளம் பெருகுவது எப்படி? போதாக் குறைக்குக் கம்பெனிகளுக்குப் பாங்குகள் வழங்கும் கடன் வசதிகள் மீதும் கடுமையான கட்டுப்பாடுகளைக் கொணர்ந்திருக்கிறது அரசு. எல்லாமே தொழில் துறையைப் பாதிப்பதாகத்தான் உள்ளனவே ஒழிய உற்பத்திக்கு ஊக்கம் அளிப்பவையாய் இல்லை.

நிதிகள், ஃபண்டு நிலையங்கள், கூட்டுறவுக் கடன் சங்கங்கள் ஆகியன தங்கள் அங்கத்தினர்களுக்குக் கடன் வழங்கக் கூடாது என்று விதிக்கப்பட்டுள்ளதை என்னவென்று சொல்ல? ஓர் அவசரத் தேவைக்குக் கடன் பெற்றுக் கொள்ளலாம் என்ற நோக்கில்தானே இவற்றில் மக்கள் சேர்கிறார்கள்? அந்த அடிப்படையையேஅழித்து விடுவதாயின் இந்த நிறுவனங்களுக்குக் கடையைக் கட்டுவது தவிர வேறு வழி இல்லை!

அபத்தச் சட்டங்களும் அனர்த்த உத்தரவுகளும் பாராளு மன்றத்தில் விவாதத்துக்கு வரும்போது ஓரளவுக்கேனும் உருமாறி, பொருளாதாரம் மூச்சு விட வேனும் அனுமதித்தால் நல்லது.

அனர்த்தங்களுக்குக் காரணம், அரசியல் சித்தாந்தக் கண்ணோட்டத்துடன் பொருளாதாரக் கொள்கையை வகுப்பதுதான். அரசியல் கலப்பற்ற அறிவு சார்ந்த பொருளாதாரக் கொள்கையே நாட்டை உய்விக்கும்.

இரண்டாம் உலகப் போரில் தரைமட்டமான மேற்கு ஜெர்மனி பொருளாதாரத்தில் அற்புதங்களை நிகழ்த்தி இன்று வெள்ளி விழா ஆண்டைக் கொண்டாடுகிறது. இருபத்தேழு ஆண்டுகளுக்குப் பிறகும் நம் அருமைத் தலைவர்களுக்குப் பரீட்சை எழுதத்தான் தெரியவில்லை என்றால் காப்பி அடிக்கக் கூடத் தெரியவில்லையே!



இதோ வந்துவிட்டேன் உதவிக்கு....
பொருளாதாரம்
விலை
வாசி




80
சதவிகிதம் வேலை வாய்ப்பு




இதோ உனக்காக...
தமிழன்




திரும்புங்கள் 1953க்கு
காலதேவன்
1974
1973



## கறுப்பை வெளுப்பாக்கலாம்!

"கறுப்புப் பணம், கறுப்புப் பணம்" என்று எல்லாரும் காட்டுக் கத்தலாகக் கூப்பாடு போடுகிறார்களே ஒழிய, என்ன நடவடிக்கை எடுப்பது என்று யாரும் தெளிவான யோசனை கூறக் காணோம். அரசாங்கமும் எவ்வித நடவடிக்கையும் எடுப்பதாகத் தெரியவில்லை.

இத்தருணத்தில் திரு சித்ரா நாராயண சாமி வெளியிட்டுள்ள ஒரு யோசனை, சிந்தனைத் தெளிவுக்கும் யதார்த்த நோக்குக்கும் மனித இயல்புக்கும் பொருந்துகிற சீரிய ஒன்றாக விளங்குகிறது.

கறுப்புப் பணம் வைத்திருப்பவர்கள் அப்படியொன்றும் நிம்மதியாக இருந்து விடவில்லை என்று சுட்டிக் காட்டுகிறார் அவர். ரூபாயின் மதிப்பு நாளுக்கு நாள் குறைந்து வருவதால் கறுப்புப் பணமாக முடங்கிக் கிடக்கும் தன் சொத்து மதிப்பிழந்து வருவதைக் கண்டு அவன் சஞ்சலமடைகிறான். தன் கள்ளத்தனம் என்றைக்கு அம்பலமாகி அத்தனை பணமும் பறிமுதல் செய்யப்படுமோ என்றும் கவலையடைந்திருக்கிறான்.

எனவே கறுப்பை வெளுப்பாக மாற்ற ஒரு சந்தர்ப்பம் அளிக்கப்பட்டால் உடனே அதைப் பயன்படுத்திக் கொள்வான்.

இந்தச் சந்தர்ப்பத்தை அரசாங்கமே அளித்து விடட்டும் என்கிறார் 'சித்ரா.'

நூறு ரூபாய் பெறுமானமுள்ள கடன் பத்திரத்தை அரசு நூற்று முப்பது ரூபாய்க்கு விற்கட்டும். இதை வாங்குவோரை எங்கிருந்து அந்தப் பணம் வந்தது என்று கேட்க மாட்டோம் என அரசு அறிவிக்கட்டும். கறுப்புப் பணம் உள்ளவர்கள் கடன் பத்திரங்களை வாங்கக் கணிசமான அளவில் முன் வருவார்கள். நாலு சதவீதம் வட்டி தரப்படும் என்றும், இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பிறகு கடன் திருப்பித் தரப்படும் என்றும் அரசு அறிவிக்கலாம்.

இந்த ஏற்பாட்டினால் கறுப்புப் பணப் பொருளாதாரமும் ஒழியும், அதையொட்டிய அளவுக்குப் பண வீக்கமும் விலைவாசி உயர்வும் நீங்கும்.

இந்தக் கடன் பத்திரங்களை அடகு வைத்து பாங்குகளில் கடன் வாங்கவும் அனுமதிக்க வேண்டும் என்கிறார் திரு நாராயணசாமி.

நியாயமான தொழில் வர்த்தக அபிவிருத்திக்குத் தரப்படும் இந்தக் கடன், பொருளாதார முன்னேற்றத்துக்கு உதவும்.

'கறுப்புப் பணம் வைத்திருப்பவர்களை நூற்றுக்கு முப்பது ரூபாய் என்கிற ஓர் அபராதத் தொகையுடன் மட்டும் விட்டு விட்டால் நியாயமாக வரி கட்டுகிறவர்கள், மனத்தாங்கல் அடைய மாட்டார்களா?' என்ற கேள்விக்கும் பதில் தருகிறார் சித்ரா.

இப்போது நியாயமாக வரி கட்டுகிறவர்கள் அபரிமித வரியினாலும் அவதிப்படுகிறார்கள், நாட்டின் பொருளாதாரச் சீரழிவினால் விலைவாசிகள் உயர அதனாலும் கஷ்டப்படுகிறார்கள்.

மத்தளத்துக்கு இரண்டு பக்கமும் இடி என்கிற நிலை மாறி ஒரே ஒரு அவஸ்தையோடு நிற்கட்டுமே என்கிறார்.

நியாயம்தான்.

ஆனால் கறுப்புப் பணப் பொருளாதாரத்தை இம்மாதிரி முறியடித்தால் மட்டும்

### ஓர் அறிவிப்பு

பத்திரிகைக் காகிதத்தின் எக்கச்சக்கமான விலையேற்றம் காரணமாக கல்கி இதழின் விலையை அடுத்த வாரம் முதல் அறுபது பைசாவாக உயர்த்த வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு உள்ளாகியிருக்கிறோம். தவிர்க்க முடியாத இந்த விலை உயர்வை நேயர்கள் அனுதாபத்துடன் ஏற்கக் கோருகிறோம்.

இந்த விலைவாசி உயர்வு, கலப்பட யுகத்தில் கொடுக்கிற காசை விடப் பல மடங்கு அதிகமான மதிப்புள்ள பொருளைக் கல்கி பத்திரிகையை வாங்கும் போது நீங்கள் பெறுகிறீர்கள் என்பதையும் அது கலப்படமற்ற, தூய, சுவையான பத்திரிகையாக வெளிவந்துகொண்டிருக்கிறது என்பதையும் சுட்டிக் காட்ட விரும்புகிறோம்.

இந்த நற்பணி தொடர அன்பர்களின் ஒத்துழைப்பை வேண்டுகிறோம்.

— நிர்வாகி, கல்கி காரியாலயம்



நல்ல காரியங்களைச் செய்யத் தைரியம் வேண்டும். செய்த தவற்றைத் திருத்திக்கொள்ள அதைக் காட்டிலும் துணிச்சல் வேண்டும். நமது முதல்வரிடம் அந்தத் துணிச்சல் இருப்பது கண்டு மகிழ்கிறோம். செப்டம்பர் முதல் தேதியிலிருந்து தமிழகத்தில் பூரண மதுவிலக்கை அமுல் படுத்தவிருக்கும் திரு கருணாநிதி அவர்களையும் தி. மு. க. அமைச்சரவையையும் மனமார வாழ்த்துகிறோம்.

போதாது. மீண்டும் மீண்டும் கறுப்புப் பணம் பண்ண ஆசை உண்டாகாத வகையில் நமது வரி முறைகள் மனிதாபிமானத்துடன் மாற்றியமைக்கப்படவும் வேண்டும்.

## அசுர சக்தியுடன் விளையாட வேண்டாம்!

ஆக்கபூர்வமான பணிகளுக்காகவே அணு வெடிச் சோதனைகள் நடத்தினோம் என்று ஆர்ப்பாட்டமாகப் பேசுகிறவர்கள் தயவுசெய்து சர்வதேச அணுசக்தி நிறுவனத்தின் பொதுஜனத் தொடர்பு அதிகாரி நரிந்து பத்திரிகைக்கு எழுதியுள்ள ஒரு கடிதத்தைப் படிக்க வேணும். அவர் கூறுகிறார்:

"1960-ம் ஆண்டுகளில் அணு வெடிச் சக்தியை ஆக்கபூர்வமான பல காரியங்களுக்குப் பயன்படுத்தலாம் என்று யோசனைகள் தெரிவிக்கப்பட்டன. ஆனால் அதன் பிறகு நடந்த பல ஆராய்ச்சிகள் இத்துறையில் முன்னேற்றம் காண முடியாமல் தயக்கமடையச் செய்துள்ளன. நில அதிர்ச்சி, கதிரியக்கம் ஆகியவற்றின் விளைவுகள் குறித்த ஆராய்ச்சிகள் கவலைக்கிடம் அளிக்கின்றன. எனவே, ஆஸ்திரேலியாவில் ஒரு துறைமுகம் அமைப்பது, பனாமாவில் இரு கடல்களையும் இணைக்கும் மற்றொரு கால்வாய் உருவாக்குவது போன்ற திட்டங்கள் கைவிடப்பட்டுள்ளன."

அணுசக்தியிடம் ஆக்கத் திறமை உண்டு. அரக்க குணமும் உண்டு. அரக்க குணத்தை அவிழ்த்து விட்டு விட்டால் மனித குலத்தின் அழிவுக்கு வழிவகுத்தவர்களாவோம். விஞ்ஞான முன்னேற்றம் பொறுப்புணர்ச்சியுடன் நடக்கட்டும். மார் தட்டுவதற்கு அங்கே இடமில்லை.

'நாங்கள் விரும்பியிருந்தால் பத்து வருஷங்களுக்கு முன்னதாகவே பூமி மட்டத்துக்கு மேலே அணுகுண்டை வெடித்திருக்கலாம்' என்ற பிரதமரது பேச்சு அசம்பாவிதம் மட்டுமல்ல; அதில் ஆணவமும் தொனிக்கிறது.

ராஜாஜி சிந்தனை

## அன்று அவசியம், இன்று அத்யாவசியம்!

ஜெயப்பிரகாசர் சரியான சமயத்தில் சரியான யோசனை கூறியுள்ளார். தேசம் தற்போது மூழ்கிக் கொண்டிருக்கும் புதை சேற்றுக் குழியிலிருந்து அதனை மீட்கக் கட்சிச் சார்பற்ற தேசிய சர்க்கார் அமையவேண்டும் என்று அறைகூவல் விடுத்திருக்கிறார்.

தேர்தலுக்குப் பிறகு, வெற்றி பெற்ற அபேட்சகர்கள் கட்சிப் பிரதிநிதிகளாக இன்றி மக்களின் பிரதிநிதிகளாகச் செயல்பட்டு ஒரு தலைவரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அத்தலைவர் கட்சிச் சார்பின்றி இயங்கி அறிவாளிகளைக்—அவர்கள் எந்தக் கட்சியைச் சோந்தவர்களாயினும் சரி—கொண்ட மந்திரி சபையை அமைக்க வேண்டும்.

இப்போதுள்ள இக்கட்டான நிலைமையில் கட்சிச் சார்பற்ற தேசிய சர்க்காரே தேவை.

சுயராஜ்யா, டிசம்பர் 24, 1966.

Prestige | PREETT

# பத்து லட்சத்துக்கும் அதிகமான குடும்பத் தலைவிகள் உபயோகிப்பது பிரஸ்டீஜ்—இந்தியாவில் அதிகம் விற்பனையாகும் பிரஷர் குக்கர்

## காரணம் என்ன?



**அதிகக் கொள்ளளவு:**
பிரஸ்டீஜ் மூடி வெளிப்புறம் பொருந்துவதால் அதிக உணவு சமைக்க நிறைய இடம் கிடைக்கிறது. உள் அடுக்குகள் பெரியவை. காரணம் பிரஸ்டீஜின் கொள்ளளவு வேறு வகை குக்கர்களை விட 1/3 பங்கு அதிகம்.

**அதி வேகம்:**
பிரஸ்டீஜில் உபயோகிக்கப்படும் சிறப்பான அலுமினியக் கலப்பு உலோகம், சீராகவும் விரைவாகவும் சூடு பரவ உதவுகிறது. அதனால் நேரமும் எரிபொருளும் மிச்சம்.

**அதிக பாதுகாப்பானது:**
மூடுவதற்கு இரட்டிப்பு வசதியுள்ள மூடி. மூன்று கட்டங்களில் அமைந்துள்ள பிடிப்புடன் கூடிய ரப்பர் பாதுகாப்பு அடைப்பான், குக்கரை பாதுகாப்பானதாகச் செய்கிறது.

பிரஸ்டீஜ் 6 அளவுகளில் கிடைக்கிறது. வாழ்நாள் முழுவதும் உழைப்பதற்கு உறுதியளிக்கிறது.

உங்கள் பிரஸ்டீஜ் குக்கர் அதி நுட்பமானது. சிறந்த பயிற்சி பெற்ற பழுதுபார்ப்போர் தான் அதை சீராக்க முடியும். விற்பனைக்குப் பிறகும் உங்கள் பிரஸ்டீஜுக்கு விரைவாகவும் தரமாகவும் சீர்பணி புரிய, நாடெங்கும் 250க்கும் அதிகமான ஸர்வீஸ் ஸ்டேஷன்கள் இருக்கின்றன. பிரஸ்டீஜ்-ப்ரீத் பணி நிலையங்களிலும், விற்பனையாளர்களிடமும், மட்டுமே உத்திரவாதமுள்ள மாற்றுப் பகுதிகள் கிடைக்கின்றன.







டிடி. (பிரைவேட்) லிமிடெட், பெங்களூர் 560016

SAA/TTP/1008 R

**இல்லத்தரசிகளே!**
சரியான அளவுகளைத் தெரிந்துகொள்ள உபயோகியுங்கள்
**PREETT ப்ரீத் ஸ்டாண்டர்ட் அளவிடும் கப் மற்றும் ஸ்பூன்கள்**
நேஷனல் சமையல் அஸோசியேஷன் ஆஃப் இந்தியாவின் அங்கீகாரம் பெற்றவை. திரவ-திட பதார்த்தங்களை இனி கண் மதிப்பில் அளவிட வேண்டியதில்லை.
எல்லா பிரபல விற்பனை நிலையங்களிலும் கிடைக்கும்.



# எண்ணெய்கள் எல்லாமே எண்ணெய்கள்தாம்...

# ஆனால் ஸிங்கர்* ஆயில்

'மல்டி-ப்ரொடெக்டிவ்' ஆகும்.

ALL-PURPOSE
HIGH QUALITY
SINGER oil

நீங்கள்
ஒருமுறை உபயோகித்துப்
பார்த்தீர்களானால் ஸிங்கர்*
ஆயிலின் தனிச்சிறப்பு தென்னெனத்
தெரியவரும். இது 'மல்டி-ப்ரொடெக்டிவ்'
(பல்வேறு பாதுகாப்பு தரும்)
எண்ணெ. இது உங்கள் மெஷினுக்கு
எண்ணெப் பசை அளித்து, துருப்பிடிக்காமல்
காப்பதோடு, எல்லா உறுப்புகளும் நெடுங்
காலம் சீராக இயங்க உதவுகிறது.
எல்லா இயந்திரங்களின் உறுப்புகளையும் நன்கு
பராமரிக்க எப்பொழுதும் ஆல்-பர்ப்பஸ்
ஸிங்கர்* ஆயிலையே உபயோகியுங்கள்.

இந்தியா முழுவதிலும் கிடைக்கிறது.

0. 0852 லிட்டர்



ஸிங்கர் அளிப்பவை சிறந்த பொருட்களே
சிங்கர் சூயிங் மெஷின் கம்பெனி,
207, டி. என். ரோடு, பம்பாய் 400 001

* ஸிங்கர் கம்பெனியின் ட்ரேட்மார்க்.

SSM.16.TAM.

# இன்னல் தருவதும் அவன் இன்னருளே!

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசார்ய சுவாமிகள்

அம்பாள் கருணாமயமானவள், அருளே உருவானவள் என்கிறோம். லலிதா ஸஹஸ்ர நாமத்தின் முடிவில் அவளை 'ஒரு காரணமும் இல்லாமல் கருணை செய்கிறவள்' (அவ்யாஜ கருணாமூர்த்தி) என்று சொல்லியிருக்கிறது.

ஆனால் லோகத்தில் கணக்கு வழக்கே இல்லாமல் கஷ்டங்களும் இருக்கின்றன. எனக்குத்தான் தெரியும், ஜனங்களுக்கு எத்தனை தினுசான கஷ்டங்கள் இருக்கின்றன என்று. என்னிடம் வருகிறவர்கள் எல்லாம் ஏதாவது கஷ்டத்தைச் சொல்கிறார்கள். பூஜை புரஸ்காரம், க்ஷேத்திராடனம், தீர்த்தாடனம் செய்கிறவர்களுக்கும் சொல்லிமுடியாத கஷ்டங்கள் வருகின்றன. இந்தச் சமயத்தில் சில பேர் ரொம்பவும் மனசு வெதும்பி 'ஐயோ! நான் இத்தனை பூஜை பண்ணினேனே, பக்தி வைத்தேனே, அம்பாள் எனக்குக் கஷ்டத்தையேதானே கொடுத்துக்கொண்டிருக்கிறாள்? கருணாமூர்த்தி, கருணாமூர்த்தி என்று அவளைச் சொல்கிறார்களே, என் விஷயத்தில் அவளுக்குக் கண் இல்லையே' என்று துக்கப்படுகிறார்கள். அம்பாளிடம் கோபம் கூட அடைந்து விடுகிறார்கள். ஆனால் என்னைக் கேட்டால் கஷ்டம் தருவதே அம்பாளின் கருணைதான்; பார்க்கப் போனால் இதுதான் பெரிய கருணை என்று தோன்றுகிறது. நாம் **இப்போது** செய்கிற நல்லதை மட்டும் நினைத்துப் பார்த்து நமக்குக் கஷ்டம் வருவது நியாயமா என்று பிரலாபிக்கிறோம். தெய்வத்தை நொந்து கொள்கிறோம். ஆனால் எப்படிப்பட்டவர்களாக இருந்தாலும் நாம் ஒவ்வொருத்தரும் நல்லது மட்டும்தானா செய்திருக்கிறோம்? நம்மை நாமே அலசிப் பார்த்துக் கொண்டால் நாம் எத்தனை தப்புகள் பண்ணியிருக்கிறோம், காரியத்தில் செய்யாவிட்டால்கூட மனசினால் எத்தனை மகா பாபங்களைப் பண்ணியிருக்கிறோம் என்பது தெரியும். இதெல்லாம் இப்போதைய—அதாவது இந்த ஜன்மத்து — விஷயம். இதற்கு முன் ஜன்மங்களில் நாம் என்ன செய்தோம் என்று நமக்குத் தெரியாது. இந்த விதையைப் போட்டால் இந்தப் பயிர் வரும் என்கிறது ஸ்வாமி போட்ட சட்டம். பூர்வ ஜன்மங்களில் வினையை விதைத்திருக்கிறோம். அதற்கு அவர் தருகிற பலனை, கஷ்டத்தை இப்போது அநுபவிக்கிறோம். வாஸ்தவத்தில் நம் தோஷங்கள், பாவங்கள் நமக்குப் பூரணமாகத் தெரிந்துவிட்டால் அம்பாள் நமக்குத் தருகிற இத்தனை கஷ்டமும்கூடப் போதாது என்றுதான் ஆகும். அப்போது நாமே பச்சாத்தாபப்படுவோம். 'இத்தனை கஷ்டத்துக்கிடையில் அவளை நினைத்துக் கதிமோட்சம் தேடிக் கொள்கிற வழியையும் கொடுத்திருக்கிறாளே! இது அதிகப்படி கருணை அல்லவா? இதைப் புரிந்து கொண்டு சந்தோஷப்படாமல், அவளையே குறை சொல்வது எத்தனை அநியாயம்? ஏற்கனவே பண்ணின தப்பெல்லாம் போதாது என்று இந்தப் பெரிய தப்பையும் பண்ணுகிறோம்!' என்று உணருவோம்.

குழந்தை மண்ணைத் தின்கிறது. அம்மாக்காரி அதன் கைகளைத் துணி போட்டுக் கட்டுகிறாள். அதற்கு மகா கோபம் வருகிறது. 'அம்மாவாம், அம்மா! கொஞ்சம்கூட இரக்கம் இல்லாதவள். இவள்தான் நமக்குப் பரம த்வேஷி' என்று நினைக்கிறது. காரணம் இல்லாமலா அம்மா கட்டிப் போட்டாள்? குழந்தையைப் பற்றி அவளுக்கு இல்லாத அக்கறையா? குழந்தை தனக்குத் தானே சத்ருவாக இருந்து கொண்டு, அம்மாவைச் சத்ரு என்று நினைக்கிறது!

நாம் எத்தனை பெரியவர்களாக இருந்தாலும், என்னதான் அகடவிகடம் செய்தாலும், வாஸ்தவத்தில் இந்தக் குழந்தை மாதிரிதான் இருக்கிறோம். நம்முடைய பழைய தப்புக்கு அவள் தண்டனை தருவது நமக்குக் கஷ்டமாக இருக்கிறது. அதிலிருந்து விடுபட முடியவில்லை. நமக்கு அந்தச் சக்தி இல்லை. கட்டிப் போட்டுவிட்டாள் என்று குற்றம் சொல்கிறோம். குழந்தை மண்ணைத் தின்னப் போகிற மாதிரி நாம் அதே பழைய தப்புக்களைப் பண்ணாமலிருப்பதற்காகத்தான் கஷ்டம் என்கிற கட்டை ஜகன்மாதா போட்டிருக்கிறாள். கஷ்டம் வந்தால், 'நாம் பூர்வத்தில் பண்ணின பாவத்தாலேயே இது வந்தது; ஆனபடியால் இந்த ஜன்மத்தில் தப்பு பண்ணினாலும் இது மாதிரியே கஷ்டங்கள் இனியும் வந்து கொண்டேயிருக்கும். அப்படித் தப்புப் பண்ணாமலிருக்கப் புத்தி தர வேண்டும் என்று அம்பாளைப் பிரார்த்தித்துக் கொண்டேயிருப்போம்' என்று தெளிய வேண்டும்.

நாம் நல்லது என்று நினைக்கிற சௌக்கியங்களை அம்பாள் தருகிறபோது மட்டும் கருணை என்று நினைக்கிறோம். அவற்றைப் பெற நமக்கு யோக்கியதை இல்லாதபோதுகூட அவள் அநுக்கிரகிப்பதால் இதைக் காரணமில்லாத கருணை என்கிறார்கள். கஷ்டமோ ஒரு காரணத்துக்காக உண்டான கருணை. நாம் பூர்வத்தில் செய்த தப்பு அதற்குக் காரணம். இந்த மாதிரி இனிமேல் நாம் செய்யக்கூடாது என்று உணர்த்துவதற்காக நம்மை நாமே நல்லவர்களாக்கிக் கொள்வதற்காகக் கஷ்டத்தைத் தருகிறாள். நல்லது என்று நாம் நினைக்கிற சௌக்கியங்களால் பலவிதமான அனர்த்தங்களும் நமக்கே உண்டாகலாம். எனவே, நமக்குச் சௌக்கியம் தந்து நல்லதைச் செய்கிற கருணையைவிட, நம்மையே நல்லவர்களாக்கிக் கொள்ளச் செய்கிற இந்தக் கஷ்டம் தரும் கருணைதான் விசேஷமானது என்று தோன்றுகிறது.

# நிழல்கள் தொடர்வதில்லை

இரவு நடுச்சாமம் வரையில் நடந்த அசதி. நேற்று முழுதும் ஒரு கவளம் அன்னம்கூடக் கிடைக்கப் பெறாததால் ஏற்பட்ட களைப்பு. அந்தப் பாழ் மண்டபத்தில் படுத்தவன் அடித்துப் போட்டது போல் உறங்கிவிட்டேன். கண் விழித்தபோது கீழ் வானத்தில் சூரியன் கரகரவென்று கால் பாகத்துக்கு ஏறிவிட்டிருந்தான்.

சுற்றிலும் உற்றுப் பார்க்கிறேன். இந்தப் பூமண்டலத்தில் எனக்கு மிக நன்றாகப் பரிச்சயமான அதே பகுதிதான் இது. இந்த இடிந்த மண்டபம், அதோ சலசலத்து ஓடுகின்ற சிற்றாறு, கூப்பிடு தூரத்தில் சோபையற்று வெறிச்சோடிக் கிடக்கும் அந்தக் குக்கிராமம். அக்கிரகாரத்துக் கோடியில் கலசம் சரிந்து, முனை ஒடிந்து காட்சியளிக்கும் கண்ணன் கோயில் ... எல்லாவற்றுக்கும் மேலாக இந்த மண்ணின் தனி மணம்...

இத்தனையுமே என் புலன்களோடு நெருங்கிப் பழகியவைதாம்.

மண்டபத்தை விட்டு இறங்கி ஓடையை நோக்கி நடக்கிறேன். ஓடைக் கரை வேப்ப மரத்திலிருந்து ஒரு குச்சியை ஒடித்துப் பல் துலக்கிய வண்ணம் தெளிந்த நீரில் என் கோலத்தைப் பார்க்கிறேன். இப்படித் தண்ணீரில் பார்த்தால்தான் உண்டு. கண்ணாடி பார்த்துப் பல வருடங்கள் ஆகி விட்டன.

தாறுமாறாக வளர்ந்து சிக்குப் பிடித்த தலைமுடி, காடுபோல் மண்டி முளைத்து முகத்தில் முக்கால் பகுதியை மறைத்துக் கொண்டிருக்கும் நீண்ட தாடியும் மீசையும்...

பள்ளம் விழுந்த கன்னங்கள், வறண்ட முகாரவிந்தம், வலப்புறத்துப் புருவத்தின் கீழ் மரப் பொந்திலிருந்து எட்டிப் பார்க்கும் பட்சி போல் ஏங்கிய பார்வை கொண்ட ஒற்றைக் கண், இடப் புறத்தில் கண்ணற்ற வெறும் குழி மட்டும்; வற்றிய உடம்பில் தொட்டுத் தொட்டு எண்ணக் கூடிய விலா எலும்புகள், ஒட்டிய வயிறு, நடுத்தர உயரம் தான் எனினும் சதா தரையைப் பார்த்தே நடந்து நடந்து சற்றே கூனிவிட்டிருந்த முதுகு, அரையில் இளித்துக் கொண்டிருக்கும் கந்தல் ஆடை....

என் தோற்றத்தைப் பார்க்க எனக்கே பரிதாபமாக இருக்கிறது... நான் பிச்சைக்காரனா?...



இல்லே, இல்லே, இல்லே!

பின்னே நான் யார்? அது எனக்கே ஒரு புதிர்.

துணியை அதிஜாக்கிரதையாகக் கசக்கிப் பிழிந்து விட்டு நீராடுகிறேன். ஏதோ ஒரு சுகம்... ஓர் இதம்....

'ஆண்டவனே! இன்றைப் போதுக்கு எப்படி வழி காட்டப் போகிறாயோ?' என்று ஜபித்த வண்ணம் கரையேறித் திருமண்ணைக் குழைக்கத் தொடங்குகிறேன்.

''மாமா!....''

எங்கிருந்து குரல் வருகிறது?

கண்ணை இடுக்கிக் கொண்டு பார்க்கிறேன். கரையிலே, பத்துப் பன்னிரண்டு வயதிருக்கும். ஓர் அந்தணச் சிறுவன், கட்டுக் குடுமியும், நெற்றியிலே, பளிச்சிடும் திருமண்காப்பும், கிருஷ்ணாஜனம் கூடிய முப்புரி நூல் துலங்கும் தோளுமாக, சாக்ஷாத் ஸ்வாமி தேசிகன் மாதிரி....

''என்னடா கொழந்தே, உன் பேரென்ன?''

''தேசிகன், மாமா!''

என் உடம்பு புல்லரிக்கிறது.

''எந்தக் கிளாஸ் படிக்கிறே?''

''ஆறுவது...''

அவன் என்னவோ சொல்லத் துடிக்கிறான்.

''மாமா, எங்கப்பாவுக்குச் சிராத்தம்!''

புயங்களிலும் மார்பிலும் திருமண் தரித்துக் கொள்கிறேன்.

''மாமா.... சிராத்தத்துக்கு.... பிராம்மணா கெடைக்கல்லே மாமா.''

அவனது ஏக்கக் குரல் என் இதயத்தை என்னவோ செய்கிறது.



பையன் சடக்கென்று என் பாதங்களில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்குகிறான்.

''மாமா கிருபை பண்ணி...''

''சொல்லு.''

''நீங்கதான் எங்க அப்பா சிராத்தத்தை நிறைவேத்தி வைக்கணும்.''

என் கண்ணில் நீர் திரண்டது.

''ஆகட்டும் கண்ணு!''

''ஆனா...''

''என்ன?''

''நாலணாவுக்கு மேலே தக்ஷிணை குடுக்க எங்களுக்குச் சக்தி இல்லே மாமா.''

என் மனம் கசிந்து விட்டது.

''கண்ணு, ஒனக்குத் தெரியுமா?''

''என்ன மாமா?''

''சிரத்தையோட பிதுர்க்களை நெனைச்சுச் செய்யற சடங்குக்குப் பேர்தான் சிராத்தம். அப்படிப்பட்ட ஒரு கைங்கர்யத்தைப் பணத்துக்கு ஆசைப்படாம நடத்தி வைச்சா எத்தனையோ புண்ணியம்னு என்னை காலம் போயிடுத்து. நம்பிக்கையே கொறைஞ்சிண்டு வர இந்த நாளிலே இத்தனை சிரத்தையோட அப்பா திவசத்தை நடத்தணும்னு நெனைக்கிற ஒன்கிட்ட தக்ஷிணை வாங்கவே என் மனசு சம்மதிக்காதுடா கண்ணு!''

''இல்லே மாமா, தக்ஷிணை இல்லாம பிராம்மணாளை அனுப்பக் கூடாதுன்னு அம்மா சொல்லுவா.''

நான் முறுவலோடு அவனைப் பார்க்கிறேன்.

என் திருமண் காப்பு முடிகிறது. நாங்கள் நடக்கிறோம்.

அக்கிரகாரத்து வீதியில் பல வீடுகள், காரை பெயர்ந்து, சிதிலமடைந்து பூட்டுத் தொங்கிக் கொண்டிருக்கின்றன. இறந்திருந்த ஒன்றிரண்டு வீடுகளிலும் மனித சஞ்சாரத்தின் அறிகுறியே தென்படவில்லை. கண்ணன் கோவில்கூட பூசையும் நடக்கிறதா என்னும் படியல்லவா களையற்றுக் கிடக்கிறது?

கோவிலின் வலப்புறம்.... அந்தப் பாழ்மனை.... எனக்கு மிக மிகப் பரிச்சயமான மாடி வீடு அங்கேதான் இருந்தது. அதற்கு எதிரே!

என் நடை சற்றே தளர்கிறது. அங்கே குந்திட்டு நிற்கும் குட்டிச் சுவர்கள் என்னைப் பார்த்துப் பரிகசிக்கின்றன. நெடுமூச்செறியவும் திராணியில்லே எனக்கு.

அதோ கோயிலுக்கு இரண்டு மூன்று வீடுகள் இப்பால்.... வாசலில் ஆவலோடு வழிமேல் விழி வைத்துக் காத்திருக்கிறாளே, அவள்தான் தேசிகனின் அம்மாவா? நடுத்தர வயதுதான். உலகில் உள்ள ஏழைமை யெல்லாம் திரண்டு உருவானது போல், சருகாக, கானல் நீரின் அலை போல், நிழலாகத் தெரிந்த அவள் அவசரமாக உள்ளே போகிறாள்.

வீட்டை நெருங்கும்போதே தேசிகன் உரக்கக் கூவிக்கொண்டே ஓடுகிறான்.

''அம்மா! பிராம்மணா இல்லேன்னு தவிச்சுண்டிருந்தோமே... அழைச்சுண்டு வந்துட்டேன்!''

அவன் குரலில் குதூகலம்.

இடைகழியைக் கடந்து முற்றத்துக்கு வருகிறோம். பட்சியங்களின் வாசனை கம்மென்று எட்டுகிறது.

''மாமாவுக்குக் கால் அலம்ப ஜலம் குடு தேசி!''

சமையலறையிலிருந்து பாத்திரங்களின் மெல்லிய ஒலிகளுக்கிடையே தெம்பு கலந்த ஓர் கனஸ்வரம்.

தேசிகன் தண்ணீர் தர நான் கால்களைச் சுத்தம் செய்துகொண்டு வலப்புறம் திரும்பிப் பார்க்கிறேன்.



கூடத்தில் ஒரே ஒரு மனை. மற்றப்படி திவசச் சடங்குக்கு வேண்டிய உபகரணங்கள் எவையுமே இல்லை.

''மாமா, கோபிச்சுக்க மாட்டேளே?''

''அட சமர்த்து, ஒன்னைக் கோபிச்சுக்க மனசு வருமா?''

''வாத்தியார் அஞ்சு ரூபா கேட்டார்...''

எனக்கு நிலைமையைப் புரிந்து கொள்ள முடிகிறது.

''பரவாயில்லே தேசிகா! நானும் கொஞ்சம் அத்யயனம் பண்ணியிருக்கேன், சங்கல்பமா பண்ணி முடிச்சுடலாம்.''

''காலையிலேந்து பைத்தியம் பிடிச்சவமாதிரி தவிச்சிண்டிருந்தேன். இருந்தாலும் 'அப்பா காரியத்துக்கு ஒரு கொறையும் வைக்க மாட்டார்'ன்னு நான் சொல்லலே தேசிகா?... அந்தப் பகவானே இவாளோட உருவத்திலே....''

அதற்கு மேல் அவளால் பேச இயலவில்லை.

தேசிகன் தருப்பையைக் கொணர்கிறான். நான் அதைப் பவித்திரமாக முறுக்கிக் கொண்டே பேசுகிறேன்.

''எத்தனை வருஷமா நீ இதைப் பண்ணிண்டு வரே?''

''அஞ்சு வருஷமா.''



''அவா அப்பாவுக்கு அது நேர்ந்தபோது தேசிகனுக்கு ஆறு வயசு. அடுத்த வருஷமே கொழந்தைக்குப் பூநூல் போட்டு வெச்சுட்டேன்... பிதுர்க் கைங்கர்யத்துக்காக...''

அந்த அஞ்சுகின்ற தொனியிலும் ஒரு பெருமிதம்.

சிராத்தம் ஆரம்பமாகிறது. மந்திரங்களை நான் சொல்ல, தேசிகன் உடன் உச்சரிக்கிறான்.

''ஸ்ரீமான் வேங்கட நாதார்ய...''

சங்கல்பம் தொடங்குகிறது. வருஷம், அயனம், மாஸம், பக்ஷம், திதி இத்தியாதிகள் தொடர்கின்றன.

''தேசிகா! கோத்ரத்தையும் அப்பா பெயரையும் சொல்லு.''

அவனுக்கு மனப்பாடம். கடகடவென்று பொரிந்து தள்ளுகிறான்.

''அப்பா பெயர் என்னன்னு சொன்னே?''

''ஸந்தான கோபாலன்!''

''......''

''என்ன மாமா?''

''ஒண்ணுமில்லேப்பா... ஒருவேளை...''

''ஒருவேளை?....''

''நீ கோமாண்டூர் சந்தானத்தின் பிள்ளையாக இருக்கலாமோன்னு...''

அடுக்களையிலிருந்து பதில் வருகிறது.

''ஆமாம், தேசிகா... உன் அப்பா அடிக்கடி பெருமையாச் சொல்லிப்பா... 'தெரியுமாடி, நான் கோமாண்டூர் குடும்பமாக்கும்'னு...''

''ஒங்களுக்கு எங்கப்பாவைத் தெரியுமா மாமா?''

''கேள்விப்பட்டிருக்கேன்.''

சுதாரித்துக் கொண்டு ஒரு திடமான முடிவுக்கு வந்தவனாக மீண்டும் சடங்குகளைத் தொடங்குகிறேன். வாய் மந்திரங்களை முணுமுணுக்கிறது. மனம் எங்கெங்கோ தாவுகிறது.

சந்தானத்தைடா தெரியாது? அந்தக் கிராமத்திலேயே அவன்தானே படித்தவன், அறிவாளி, செல்வாக்குள்ளவன் எல்லாம்! அதுமட்டுமா? வடிகட்டின அயோக்கியனும் கூட.

கட்டுக்குடுமியும் மொழுமொழுவென்று பளபளக்கும் மேனியுமாக மன்மதனைப் போலிருப்பான் சந்தானம். இப்போது குட்டிச்சுவர் நிற்கிறதே, அந்த இடத்தில் தான் அவன் வீடு.

சந்தானத்துக்கு விவாகமாகும்போது வயது இருபத்தெட்டு. அவனது அவள்... கணக்குக்கு இருபது. கல்யாணமாகி ஐந்தாறு ஆண்டுகள் வரை குழந்தை இல்லை என்பதைத் தவிர குடும்பத்தில் மகிழ்ச்சிக்குக் குறைவில்லை....பிறகு....

சந்தானத்தின் வீட்டுக்கு எதிரே வருஷக் கணக்காகப் பூட்டியிருந்த அந்த மாடி வீடு சேஷய்யங்காருடையது. சேஷய்யங்காருக்குச் சென்னையில் பெரிய உத்தியோகம். கிராமத்திலும் நிலபுலன்கள். அந்த வருஷம் சேஷய்யங்கார் ரிடையரானார். சென்னைப் பட்டணத்தையே காலி பண்ணி விட்டாற்போல் வண்டி கொள்ளாத சாமான்களோடு வந்து இறங்கினார். கூடவே அவள் — கலோசனு — அவரது இருபத்திரண்டு வயது மகள்— அவளும் வந்தாள்.

சந்தானம் வாசலில் நின்று வைத்த விழி வாங்காமல் அவளையே பார்த்தான். அவளும் அவனையே பார்த்தாள். உதட்டைச் சுழித்து முறுவலித்தாள். சந்தானத்தைச் சனி பிடித்தது.

ஊரிலேயே சந்தானம் படித்தவனாயிற்றே? மெல்ல மெல்ல சேஷய்யங்காருக்கு அவனைப் பிடிக்கப் பண்ணிக் கொண்டு விட்டான். எப்போதும் அவர் வீடே கதி.

கலோசனு படித்த பெண். சேஷய்யங்காரும் பெண்ணுக்குச் சம உரிமை கொடுத்திருந்தார். சந்தானமும் அவளும் சிரித்துப் பேசுவதை அவர் விகல்பமாக எண்ணவில்லை. வயல் வெளிப்பக்கம் 'வாக்கிங்' போய்விடுவார் அவர். அவளும் அவனும் தனியே... தனியே...

தானிருப்பதையே
நினைவுறுத்தாது
தன்னிகரற்ற நிம்மதி தரும்...
அதுவே கம்:பிட் சானிடரி
டவலின் தனிச் சிறப்பு

பெண்ணென்று சொன்னாலே பெருந்துன்பம் சில நாளில்; கம்:பிட் ஒன்றுதான் கவலையை மறக்கச் செய்யும். பத்துமடங்கு ஈரத்தைப் பாங்காக உறிஞ்சும்...மற்றவற்றைவிட ஐந்துமடங்கு அதிவிரைவில். மென்மையோ மென்மை...முன்னே முட்டி நிற்காது, பின்னால் களைந்தெறியும் தொல்லையில்லை—காரணம், நீரிலே கரைத்து விடலாம் நிம்மதியாக.
அதுவே கம்:பிட்!
கம்:பிட் சானிடரி டவல் கவலையை மறந்து களிப்புடன் இருக்கச் செய்யும்!




க்ரிஸ்டின் ஹோடன் (இந்தியா) லிட்., கோர்த்தாலிம், கோவா கம்பெனியின் தரமான தயாரிப்பு.

AIYARS-CH.4 TH

(ஸ்தாபிதம்: 1947)

# பாலுஸேரி பேனிபிட் சிட் பண்டு

## பிரைவேட் லிமிடெட்

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்
"பாலுஸேரி பில்டிங்ஸ்", 3, சிங்கராச்சாரி தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5.

தந்தி: 'EVERMANS', போன்: 85834 • தபால்பெட்டி: 414

### நீண்டகாலச் சீட்டுகள்

50 மாதங்கள் — 50 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTN | ரூ. 100/- | ரூ. 5,000/- |
| LTO | ரூ. 50/- | ரூ. 2,500/- |
| LTP | ரூ. 20/- | ரூ. 1,000/- |

40 மாதங்கள் — 40 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTA | ரூ. 500/- | ரூ. 20,000/- |
| LTB | ரூ. 250/- | ரூ. 10,000/- |
| LTC | ரூ. 125/- | ரூ. 5,000/- |

### குறுகிய காலச் சீட்டுகள்

25 மாதங்கள் — 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200/- | ரூ. 5,000/- | D | ரூ. 25/- | ரூ. 625/- |
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |

சேரும் குரூப்பை விவரித்து எங்கள் விதிகளுக்கு எழுதவும்

கிளைகள்: புது டில்லி - பம்பாய் - பெங்களூர் - கல்கத்தா - கோயம்புத்தூர்




எங்கள் சேவை உங்களுக்குத் தேவை

கனகம் மணிக் கணக்கில் காத்துக் கிடப்பாள். அவன் அங்கேயே சாப்பிட்டுவிட்டுத் தாமதமாக வருவான்...ஆனால் அவள் ஏன், ஏது என்று ஒரு வார்த்தை கேட்க மாட்டாள்.

ஒரு தொன்னையில் புஷ்பம், துளசி, சந்தனம் இத்தியாதிகளை என்னிடம் நீட்டுகிறான் தேசிகன், தன் பித்ருவின் தேக அலங்காரத்துக்காக.

ஊரிலே பராபரியாக அடிபட்ட பேச்சு கனகத்தின் காதுகளுக்கும் எட்டுகிறது.

''என்னவோ கனகம், ஊரெல்லாம் அசிங்கமாப் பேசிக்கிறா... கொஞ்சம் கண்டிச்சு வை....''

''இல்லே மாமி! இதையெல்லாம் என் மனசு நம்பல்லே. அவர் என்னை ஏமாத்தவே மாட்டார்...அவர் கொணம்...''

''அடி அசட்டுப் பொண்ணே, அவன் கொணம்தான் சந்தி சிரிக்கிறதே. வெள்ளம் வரதுக்கு முன்னே அணை போடணும்பா... இல்லேன்னா விபரீதம்தான்...''

''மாமி! அப்படியே நெஜமாகவே இருந்தாலும், அதுதான் அவா இஷ்டம்னு... அதை என் தலையெழுத்துன்னு எண்ணிக்கிறேன். புருஷாளைக் கண்டிக்கிற அளவுக்கு எனக்குத் தைரியம் கிடையாது மாமி!''

தேசிகனின் தாய் இலையிலே பக்ஷணங்களையும் பரமான்னங்களையும் கொண்டு வந்து பரிமாறுகிறாள். உருக்கின நெய் தொன்னையில் வழிந்தோடுகிறது.

ஆபோசனம் ஆகிறது. தேசிகன் காயத்ரியை ஜெபித்த வண்ணம் எதிரே அமர்ந்திருக்கிறான்.

சந்தானத்தின் கதையை எங்கே விட்டேன்? ஆமாம், இப்படியே..... வதந்தியும் புகாரும் கனகத்தின் ஒரே மாதிரியான பதிலுமாக நாலைந்து மாதங்கள் ஓடிவிட்டன.

என்னதான் அயோக்கியனானாலும் சந்தானத்துக்கும் மனம் உறுத்துகிறது. யோசிக்கிறான். மனைவியைப் பிறந்தகம் அனுப்பி விட்டால்? அதற்கேற்றாற்போல் கனகத்துக்கு அப்போது ஐந்து மாதம்.

கனகம் எத்தனையோ நயந்து கேட்டாள், கெஞ்சினாள், காலில் விழுந்து மன்றாடினாள். அவன் கேட்கவில்லை. கண்ணும் கண்ணீருமாகப் பிறந்தகம் போய்விட்டாள். அவனுக்குக் குளிர் விட்டுப் போனது.

கலோசனா சந்தானத்தின் வீட்டுக்கே வந்து விடுவாள். அவனுக்கு இதமாக யோசனைகளையும் கூறுவாள். சந்தானம் நில புலன்களைப் பக்கத்து ஊர் மரக்காயனுக்கு விற்று ரொக்கமாக்கிக் கொண்டான். கனகம் வைத்துவிட்டுப் போன நகைகள் வேறு இருந்தன. ஒரு 'நல்ல' நேரத்தில் இருவரும் - கலோசனாவும் அவனும்தான் — வடக்கு நோக்கி ரயிலேறி விட்டார்கள்.

''இன்னும் கொஞ்சம் சாத்தமுது...''

தேசியின் தாய் கொணர்கிறாள்.

கையிலே தொன்னையை ஏந்தியவன் சற்று செயலாக நிமிர்கிறேன். அவளது பார்வை என்மீது படிந்து இடறுகிறது. அவள் உள்ளே போகிறாள்.

''தேசி...''

தேசிகன் எழுந்து உள்ளே ஓடுகிறான். நான் உற்றுச் செவி கொடுக்கிறேன்.

எடை குறைய!



''என் உடல் பருமனைக் குறைக்க என்ன பயிற்சி செய்ய வேண்டும்? சொல்லுங்க டாக்டர்?''

''சுலபமான பயிற்சி: தலையை இடமிருந்து வலமாகவும், வலமிருந்து இடமாகவும் ஆட்டவேண்டும்!''

''எவ்வளவு நேரம்?''

''யாராவது உனக்குச் சாப்பிட ஏதாவது கொண்டு வரும்போதெல்லாம்!'' —'மிர்ரர்' - ''பராமாப்ரியா''

---

''தேசி... உன் அப்பா கூட.... அசப்பிலே இவா மாதிரியேதான்...''

கண்ணிலிருந்து ஒரு சொட்டு உவர் நீர் தொன்னையில் விழுந்து சாத்தமுதுடன் கரைகிறது. தேசிகன் மீண்டும் வந்து எதிரே உட்கார்ந்து என்னையே கவனிக்கிறான்...

சந்தானமும் கலோசனாவும் பம்பாயில் குடியேறுகிறார்கள். அவனுக்குக் கனகத்தின் நினைப்பே இல்லை, அவனுக்குத் தகப்பனின் ஞாபகமே இல்லை. அந்தச் சொர்க்க வாழ்வு... இரண்டே மாதம் !

அவர்கள் தங்கியிருந்த இடத்துக்குப் பக்கத்து அறையில் ஒரு சேட் பையன் புதிதாக வருகிறான். பை நிறைய நோட்டுக் கற்றையும் கைநிறைய டாலடிக்கும் வைரங்களுமாக — குபேரப் பட்டணத்தையே கொள்ளையடித்து வந்தவன் போல.

கலோசனாவைப் பார்த்த அன்றே சேட் கண் சிமிட்டிச் சிரித்தான்.... இரண்டாம் நாள் 'ஹலோ' என்றான். இவள் முறுவலித்தாள்.

மூன்றாம் நாள் சந்தானம் வெளியே போய் வந்தபோது... சேட் கலோசனாவின் அறையில்....

சந்தானம் முறைத்தான். முகத்தில் பலமாகக் குத்து விழுந்தது... இரத்தம் கொட்டியது.... மயங்கிச் சாய்ந்தான்.

ஆஸ்பத்திரியில்... இடது கண்ணில் கட்டுப் போட்டிருந்தார்கள்... போலீஸ் விசாரித்தது. அவன் கலோசனாவைப் பற்றியும் சொல்லவில்லை..... சேட்டைப் பற்றியும் பேசவில்லை.

கட்டைப் பிரித்தபோது விழி போய் விட்டது என்று புரிந்தது.

''மாமா...!''

''என்ன தேசிகா;''

''அம்மா சொல்றா, ஒங்களுக்கு ரெண்டு கண்ணும் நன்னா இருந்து, தாடி மீசையும் இல்லாட்டா....''

''இல்லாட்டா ?''

'' அசல் எங்கப்பா மாதிரியே இருப்பேன்னு....''

**கோடீஸ்வரர் கேட்ட**
**சிறு உதவி**



ராக்ஃபெல்லர் தம் அலுவலகத்தை விட்டுக் கிளம்பியபொழுது ஒருவன் அவரை நெருங்கி முக ஸ்துதி செய்தான்: "இருபது மைல்கள் நடந்து வந்து உங்களைச் சந்திக்கிறேன். வரும் வழியில் பார்த்தவர்கள் எல்லோரும் ஒருமுகமாக 'நியூயார்க்கிலே தாராள மனமுடையவர் நீங்கள்தான்' என்றார்கள்."

ராக்ஃபெல்லர், "நீங்கள் வந்த வழியேதானே திரும்பப் போகிறீர்கள்?" என்று கேட்டார். அவன் 'ஆம்' என்றதும், "எனக்கு ஒரு சிறு உதவி செய்யுங்கள்" என்றார்.

"நீங்கள் கேள்விப்பட்ட வதந்தி பொய் என்று திரும்பிப் போகும்போது எல்லாரிடமும் சொல்லிக் கொண்டே போங்கள்!" —'மீரர்' - "பாமரப்ரியா"

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

நான் விரக்தியாகச் சிரிக்கிறேன்.

"நான்தான் சொன்னேனே தேசி..... சிரத்தையோட திவசம் பண்ணினா, பித்ருக்களே நேரிலே வந்து சாப்பிடறாப்பலே பிரமை தோன்றது சகஜம்."

உள்ளே விசும்பல் ஒலி கேட்கிறது.

"மாமா..."

"என்னடா கண்ணு?"

"ஓங்களுக்கு என் அப்பாவைத் தெரியும்னு சொன்னேளே?...."

"நன்னாத் தெரியும்...."

"எப்படி ?"

"காசியிலே பார்த்திருக்கேன்....."

புடவை முன்றானையால் கண்களைத் துடைத்தவண்ணம் வாசற்படியில் வந்து நிற்கிறாள் கனகம்.

"காசிலேயா, எப்போ?"

நான் தலை நிமிராமலேயே பதில் பேசுகிறேன்.

"ஹ ஹ.... ஒரு அஞ்சு வருஷத்துக்கு முன்னாடி.... சந்தானம் என்கிட்ட தன் கதையையெல்லாம் சொன்னான். கட்டின பொண்டாட்டிக்குச் செய்த துரோகத்தையெல்லாம் சொல்லிக் கதறினான்...."

கனகம் அழுதேவிட்டாள்.

"கிருஷ்ணா கிருஷ்ணா, அப்படியெல்லாம் சொல்லாதேங்கோ.... அவா எனக்கு ஒரு துரோகமும் பண்ணல்லே... பகவான் எனக்கு விதிச்ச விதிக்கு அவா என்ன பண்ணுவா...!"

எனக்குச் சோறு இறங்கவில்லை. பேச நா எழவில்லை.

"நான் என் அப்பாவைப் பார்த்ததே இல்லே, மாமா !"

"உம்...."

"அவா கங்கையிலே முழுகிட்டான்னு கடுதாசு வரச்சே என் தேசிக்கு ஆறு வயசு.."

அடைத்துப் போன தொண்டையிலிருந்து சிரமப்பட்டு வார்த்தைகளை வரவழைக்கிறேன்.

"அந்தக் கடுதாசியை உனக்கு எழுதினதே இந்தப் பாவிதானே அம்மா...."

அந்தக் 'கைம்' பெண்ணின் முகத்தில் வியப்பும் திகைப்பும்.

"அப்படியா!.... அவா என்னைப் பத்தி... எப்பவாவது ஒங்ககிட்டே தப்பா நெனைச்சிண்டு......"

"சேச்சே.... எப்பவும் உன்னைப் பத்தி ஒசத்தியாச் சொல்லுவான். 'என் கனகம் சூதுவாதறியாத பேதை.... நளாயினியைப் போல'ன்னு.... அந்தக் கடிதாசியிலே.....நீ சிகையை எடுக்கக் கூடாதுங்கிற அந்த விருப்பத்தையும்கூட.... அவன் சொல்லி நான் எழுதினதாக ஞாபகம்....."

அவள் உள்ளே புகுந்து ஒடுங்குகிறாள்... அழுகை பொத்து வெடித்துப் பீறிட்டெழுகிறது. இனியும் இதைத் தாங்கிக் கொள்ள எனக்குச் சக்தி இல்லை.

தேசிகன் தாம்பூலம் வழங்கி, என்னை வலம் வந்து நமஸ்கரிக்கிறான். அவளும் தான்....

"தீர்க்கஸு...."

நாக்கைக் கடித்துக் கொள்கிறேன்.

"தீர்க்காயுஷ்ய மஸ்து."

அவள் என்னை ஏக்கத்தோடு பார்க்கிறாள். என் மனம் கரைந்து சரிந்து உருகி வழிந்து கொண்டே போகிறது. கண நேரம் தாமதித்தாலும் என் உணர்ச்சி எங்கே கொண்டு போய்விடுமோ ! என் வாய் என்ன உளறி விடுமோ......!

எங்கெங்கோ சுற்றியலைந்த கால்கள் எப்படியோ என்னை இந்தத் திக்கில் இழுத்து வந்தன. பிறந்த மண்ணைக் கண்டதுமே, ஆசைகளை அறுத்தெறிந்துவிட்ட என் மனத்திலும், ஸ்திரமற்ற, நிர்ணயமில்லாத சஞ்சலங்களும் சபலங்களும் கொப்பளித்திருக்கலாம்.

ஆனால் இப்போது ?

அவள்.... என் கனகம், சீதை....அருந்ததி.... நளாயினி...என்ற பதிவ்ரதா ரத்னங்களின் பரம்பரையில் ஒன்றிவிட்டாள். இறந்து விட்டதாக எண்ணியுள்ள அயோக்கியக் கணவனையும்கூடத் தெய்வத்தின் ஸ்தானத்தில் வைத்து வழிபடுவதையே தன் வாழ்க்கையின் லட்சியமாக வகுத்துக் கொண்டிருக்கிறாள்.... என்றும் அந்த உயர்ந்த நிலையிலேயே அவள் இருந்துவிடட்டும். என் பாப நிழல்கூட அவள் மீது பட்டுவிட என்னால் அனுமதிக்க முடியாது.

நான் புறப்படுகிறேன்.

அவள் மெல்லக் கூறுகிறாள்.

"தேசி, மாமா எங்கே இருக்கார்னு...."

நான் சிரிக்கிறேன்.

" நான் விலாசமில்லாதவன் அம்மா... எப்போதாவது என் தேசிகனைப் பார்க்க.... இல்லே.... அடுத்த சிராத்தத்துக்கு..... கட்டாயம் வருகிறேன்."

அவள் விக்கித்து நிற்கிறாள்.

"மறந்துடாதேங்கோ மாமா!"

தேசிகன் தன் சின்னக் கரத்தை அசைக்கிறான்.

நான் முன்னேறி மெல்ல நடக்கிறேன். என் நிழல்கள் பின்னே தங்கிவிட்டன.

# சிவகாமியின் சபதம்

ஐம்பத்துநாலாம் அத்தியாயம்

## சபை கலைந்தது

சபா மண்டபத்தில் ஏற்பட்ட கிளர்ச்சி ஒருவாறு அடங்கிச் சற்று அமைதி ஏற்பட்டதும் மகேந்திர பல்லவர் மேலும் தொடர்ந்து கூறலானார்: "சபையோர்களே! நீங்கள் சொல்லுகிறபடி பல்லவ சாம்ராஜ்யம் என் ஒருவனையே நம்பியிருப்பதாக நான் ஒத்துக் கொள்ளவில்லை. இதோ என் வீர மகன் மாமல்லன் பல்லவர் குலப் பெருமையை நிலைநாட்டுவதற்கு இருக்கிறான். ஆயினும், வாதாபி மன்னனை நான் அவனுடைய படை வீட்டில் சந்தித்தது வெறும் சாகஸத்துக்காக அல்ல. புலிகேசியை நான் நேரில் பார்ப்பதற்கு ஒரு முக்கிய காரணம் இருந்தது. சற்று முன்னால் உங்களை யெல்லாம் பெருங் கலக்கத்துக்கு ஆளாக்கிய நாகநந்தி அடிகள் ஒன்பது மாதங்களுக்கு முன்னால் நம் கோட்டைத் தளபதியிடம் ஓர் ஓலை கொடுத்துப் புலிகேசிக்கு அனுப்பியிருந்தார். ஆயனரிடம் சிற்பக் கலை கற்க வந்திருந்த இந்த வீர வாலிபர் அந்த ஓலையில் உள்ள செய்தி இன்னதென்று அறியாமல் எடுத்துக்கொண்டு

அமரர் கல்கி

போனார். வழியில் இவரிடமிருந்து அந்த ஓலையை நான் வாங்கிக் கொண்டு புலிகேசியின் கூடாரத்துக்குச் சென்றேன். ஆனால், நான் புலிகேசியிடம் கொடுத்தது நாகநந்தியின் ஓலை அல்ல; நான் மாற்றி எழுதிய ஓலையைக் கொடுத்தேன். அதன் பயனாகவும், நம் வீர சேனாபதி கலிப்பகையாரின் போர்த் திறமை காரணமாகவும்தான் வாதாபி சைனியத்தை வடபெண்ணைக் கரையில் எட்டு யாதங்களுக்குமேல் நிறுத்தி வைக்க முடிந்தது.''

''பிரபு! நாகநந்தியின் ஓலையில் என்ன எழுதியிருந்ததோ?'' என்று முதன் மந்திரி சாரங்க தேவர் கேட்டார்.

''காஞ்சி நகரைப் போன்ற பாதுகாப்பு அற்ற நகரம் வேறு இருக்க முடியாதென்றும், வாதாபி சைனியம் வழியில் எங்கும் தங்காமல் நேரே காஞ்சிக்கு வந்து சேர வேண்டும் என்றும், மூன்றே நாட்களில் காஞ்சியைப் பிடித்து விடலாம் என்றும் எழுதியிருந்தது!...''

சபையின் நாலு பக்கங்களிலிருந்தும் அப்போது கோப கர்ஜனை முழக்கங்கள் ஒருமிக்க எழுந்து ஒலி செய்தன.



சக்கரவர்த்தி கையமர்த்திக் கூறினார்: ''நாகநந்தி அச்சமயம் எழுதி யிருந்தது முற்றும் உண்மை. அப்போது வாதாபியின் பெருஞ் சைனியம் நேரே காஞ்சிக்கு வந்திருந்தால் மூன்று நாட்களுக்கு மேல் நான் எதிர்த்து நின்றிருக்க முடியாது. சளுக்கரின் பதினையாயிரம் போர் யானைகளிலே ஒரு பதினைந்து யானைகள் நமது கோட்டைக் கதவுகளையெல்லாம் தகர்த்தெறிந்திருக்கும். அப்போது வைஜயந்தி பட்டணத்துக்கு நேர்ந்த கதி காஞ்சிக்கும் நேர்ந்திருக்கும்! சபையோர்களே! கதம்ப குல மன்னர்கள் வாழையடி வாழையாக வாழ்ந்து அரசு செலுத்திய வைஜயந்திப் பட்டணம் இருந்த இடத்திலே இப்போது கரியும் சாம்பரும் மேடிட்டிருப்பது உங்களுக்குத் தெரியும் அல்லவா?''

சபையில் மறுபடியும் வியப்பொலிகளும் இரக்கக் குரல்களும் எழுந்தன. மகேந்திர பல்லவர் மீண்டும் தொடர்ந்து சொன்னார்: ''இந்தக் காஞ்சிமா நகரம் உலகம் உய்ய அவதரித்த புத்த பகவானுடைய காலத்திலிருந்து ஆயிரம் வருஷங்களாகச் சீரும் சிறப்பும் பெற்று விளங்குகிறது. 'கல்வியிற் கரையிலாத காஞ்சிமா நகரம்' என்று நமது புலவர் பெருமான் திருநாவுக்கரசரால் பாடப் பெற்ற இந்தத் திருநகரின் புகழானது சீனதேசம், சாவகத் தீவு, யவனர் நாடு, ரோமாபுரி ஆகிய தூர தூர தேசங்களிலெல்லாம் நெடுங் காலமாகப் பரவி யிருக்கிறது. இப்பேர்ப்பட்ட நகரம் என்னுடைய காலத்தில் அழிந்தது என்னும் அபகீர்த்தியை நான் அடைய விரும்பவில்லை. இந்தக் காஞ்சி நகரைப் பாதுகாப்பதுதான் என்னுடைய முதற் கடமை. அந்தக் கடமையை நிறைவேற்றுவதற்கு நீங்கள் என்னுடன் ஒத்துழைப்பீர்களா?''

இவ்வாறு சக்கரவர்த்தி கேட்டபோது, சபையினர் ஒருமுகமாக, ''அப்படியே! அப்படியே!'' என்று கோஷித்தார்கள்.



சக்கரவர்த்தி மறுபடியும் கையமர்த்தி, "இந்த யுத்தம் நேர்ந்ததற்கு மூலகாரணம் இன்னதென்று உங்களுக்குத் தெரிவித்தேன். இது என்னால் நேர்ந்த யுத்தம். ஆகையால், என் போக்கில் இதை நடத்தி முடிப்பதற்கு உங்களிடம் அநுமதி கோருகிறேன்" என்றார்.

"அப்படியே! என்று மீண்டும் சபையில் கோஷம் எழுந்தது.

பின்னர் மகேந்திரர், சபையில் பின் வரிசைகளில் இருந்த தென் பல்லவ நாட்டின் கோட்டத் தலைவர்களைக் குறிப்பாகப் பார்த்து, "கோட்டைக்குள்ளே இருக்கப் போகும் எங்களைக் காட்டிலும் கோட்டைக்கு வெளியில் கிராமங்களில் இருக்க வேண்டிய நீங்கள்தான் அதிகமான கஷ்டநஷ்டங்களுக்கு உள்ளாகும்படியிருக்கும். காஞ்சியைக் காப்பாற்றுவதற்காக எல்லாக் கஷ்டங்களையும் பொறுத்துக் கொள்ள நீங்கள் சித்தமாயிருக்கிறீர்களா ?" என்று கேட்க, "சித்தம்! சித்தம் !" என்று கோட்டத் தலைவர்கள் ஒரே குரலில் முழங்கினார்கள்.

"நாளைச் சூரியோதயத்துக்குள்ளே வாதாபி சைனியம் நமது கோட்டையை நெருங்கி விடும். அதற்கு முன்னால் நீங்கள் எல்லாரும் நகரைவிட்டு வெளியேறிவிட வேண்டும். அவரவர்களுடைய ஊருக்கு விரைந்து செல்ல வேண்டும். காஞ்சி நகர் முற்றுகைக்கு உள்ளாகியிருக்கும்போது உங்களுக்கும் கோட்டைக்குள்ளேயிருக்கும் எங்களுக்கும் எந்த விதப் போக்குவரவும் இராது. கோட்டையைக் கைப்பற்ற முயன்ற புலிகேசி தோல்வியடையும் போதும் அவனுடைய கோபத்தையெல்லாம் சுற்றிலும் உள்ள நாட்டுப்புறங்களின் மீது காட்டுவான். அதற்கெல்லாம் நீங்கள் ஆயத்தமாயிருக்க வேண்டும். கோட்டத் தலைவர்களே! நன்றாக யோசித்துச் சொல்லுங்கள். காஞ்சியைக் காப்பாற்றுவதற்காக நீங்கள் சகல விதமான தியாகங்களுக்கும் சித்தமாயிருக்கிறீர்களா ? வாதாபி அரக்கர் படையினால் நேரக்கூடிய கொடுமைகளையெல்லாம் பொறுத்துக் கொள்ளுவீர்களா ? நாட்டில் கொடிய பஞ்சம் ஏற்பட்டு மக்கள் பட்டினி கிடந்து மடிய நேர்ந்தாலும் நீங்கள் மனம் கலங்காமல் இருப்பீர்களா ?" என்று சக்கரவர்த்தி கம்பீரமான குரலில் கேட்க, செஞ்சிக் கோட்டத் தலைவன் சடையப்ப சிங்கன் எழுந்து நின்று கூறினான்:

"பல்லவேந்திரா ! யோசிப்பதற்கு ஒன்றுமேயில்லை. பல்லவ இராஜ்யத்தின் மணி மகுடமாக விளங்குவது காஞ்சிமா நகரம். காஞ்சி அழிந்தால் பிறகு யார் உயிரோடிருந்து என்ன பயன்? காஞ்சி நகரைக் காப்பாற்றுவதற்காக எந்த விதமான தியாகங்களைச் செய்யவும் நாங்கள் சித்தமா யிருக்கிறோம். தங்களுடைய சித்தம் எதுவோ அதன்படி நடந்து கொள்ளுகிறோம். நான் கூறியது தான் இங்கேயுள்ள எல்லாருடைய அபிப்பிராயமும்!"

"ஆம்! ஆம்!" என்று கோட்டத் தலைவர்கள் அனைவரும் ஏகமனதாக ஆமோதித்தார்கள்.

இச்சமயத்தில் சபா மண்டபத்தின் வாசற்புறத்திலிருந்து தூதன் ஒருவன் வந்தான். அவன் சக்கரவர்த்தியை நெருங்கிப் பணிந்துவிட்டு, கிழக்குத் திசையில் ஒரு பெரும் புழுதிப் படலம் தெரிகிறதென்றும், கடல் புரண்டு வருவது போன்ற பெரு முழக்கம் கேட்கிறது என்றும் தெரியப்படுத்தினான்.

மகேந்திரர் இடிமுழக்கம் போன்ற குரலில், "சபையோர்களே! வாதாபிச் சைனியம் வந்துவிட்டது ! நம்மில் ஒவ்வொருவரும் தம் வீர தீர சாகஸங்களைக் காரியத்தில் காட்ட வேண்டிய சமயமும் வந்து விட்டது. அமைச்சர்களே ! மந்திரிகளே! இத்துடன் இன்று சபை கலைகிறது. நாளை முதல் முற்றுகை நீடித்திருக்கும் வரையில் ஒவ்வொரு நாள் இரவும் இரண்டாம் ஜாமத்தில் இங்கே மந்திராலோசனை சபை கூடும். இப்போது போய் அவரவர்களுடைய காரியங்களைப் பாருங்கள்!" என்று கூறியதும் அமைச்சர்களும் மந்திரி

# FOUR AND A HALF MILLION PEOPLE READ THE WEEKLY...

*...NATURALLY!*




**It is Asia's finest illustrated magazine.**

**It gives you:**

* Current Topics. The Weekly helps you to keep pace with tomorrow: lively comment on topical subjects—political, social, economic, cultural.

* Communities. The Weekly helps you know your neighbours—their origins, customs, rituals, their problems and their achievements.

* General Features. The latest in books, films, music, theatre, painting, short-stories, humour and satire, a fun-filled page for children; jokes—new and stale; your Fortune from the Stars, and loads of other interesting material.

All written by experts, yet lively and readable.

All illustrated by the finest photographers, artists and cartoonists of the country.

**Make the Illustrated YOUR Weekly Habit**



**The Illustrated Weekly of India**

மார்களும் துரிதமாக வெளியேறினார்கள்.

"கோட்டத் தலைவர்களே! நீங்கள் சற்றுமுன் கொடுத்த வாக்குறுதியினால் மிக்க சந்தோஷம் அடைந்தேன். அந்த வாக்குறுதியை மட்டும் நீங்கள் நிறைவேற்றி வைத்தால் புலிகேசியைக் கட்டாயம் வென்று ஜயக்கொடி நாட்டுவேன்" என்று கூறி, தளபதி பரஞ்சோதியைப் பார்த்து, "தளபதி! இவர்களைத் தெற்குக் கோட்டைவாசலுக்கு அழைத்துக் கொண்டு போங்கள்! இவர்கள் அகழியைத் தாண்டிச் சென்றதும், பாலத்தை உடைத்து எறிந்துவிட வேண்டும். மற்றப்படி கோட்டைப் பாதுகாப்புச் சம்பந்தமாக நாம் தீர்மானித்தபடி காரியங்கள் செய்திருக்கிறீர்கள் அல்லவா?" என்று கேட்க, "ஆம், பிரபு! தெற்கு வாசலைத் தவிர மற்ற மூன்று வாசல்களையும் முழுதும் அடைத்தாகிவிட்டது. பாலங்களையும் தகர்த்தாகிவிட்டது. மதில் சுவரின் மேல் வரிசையாகப் பதினாயிரம் வீரர்கள் வேலும் கையுமாய் ஆயத்தமாயிருக்கிறார்கள்!" என்றார் தளபதி பரஞ்சோதி.

பரஞ்சோதியும் கோட்டத் தலைவர்களும் சென்ற பிறகு, சபா மண்டபத்தில் சக்கரவர்த்தியும் மாமல்லரும் மட்டும் தனித்திருந்தார்கள். மாமல்லரின் முகம் உற்சாகம் குன்றி வாட்டமுற்றிருந்தது. சக்கரவர்த்தி மாமல்லர் அருகே சென்று அவருடைய தோளின் மீது கையை வைத்து "மாமல்லா! இந்த யுத்தத்தை என் போக்கிலேயே நடத்த எனக்கு நீயும் அநுமதி கொடுக்கிறாயல்லவா?" என்று கேட்டார்.

"அப்பா! என்னை ஏன் கேட்கிறீர்கள்? உங்கள் விருப்பம் எதுவோ அதுவே எனக்கும் சம்மதம்!" என்றார் மாமல்லர்.

"சந்தோஷம், குமாரா! அரண்மனைக்குப் போய் உன் தாயாரிடம் நான் பத்திரமாய் வந்து சேர்ந்துவிட்டதைச் சொல்லு. பொழுது விடிவதற்குள் இன்னும் ஒரு முக்கியமான காரியம் நான் செய்ய வேண்டியிருக்கிறது. அதையும் முடித்துவிட்டு அரண்மனைக்கு வந்து சேருகிறேன்" என்று கூற, மாமல்லர் அந்தப்புரத்தை நோக்கிச் சென்றார். சக்கரவர்த்தியோ அரண்மனை வாசலில் ஆயத்தமாய் நின்ற குதிரையின் மீதேறி இராஜ விஹாரத்தை நோக்கி விரைந்தார்.

### ஐம்பத்தைந்தாம் அத்தியாயம்

## முற்றுகை தொடங்கியது

மறு நாள் சூரியோதயம் ஆகும் சமயத்தில் கமலி தன்னுடைய வீட்டுத் திண்ணையில் கவலை தோய்ந்த முகத்துடன் உட்கார்ந்திருந்தாள். இரவெல்லாம் கண் விழித்தபடியாலும் கண்ணீர் விட்டபடியாலும் அவளுடைய கண்கள் வீங்கியிருந்தன.

கண்ணபிரானின் தகப்பனார் அவள் அருகில் உட்கார்ந்து ஆறுதல் மொழிகள் சொல்லிக் கொண்டிருந்தார்.

முதல் நாள் சாயங்காலம் குமார சக்கரவர்த்தி திரும்பி வந்த செய்தி கிடைத்தவுடனேயே கண்ணபிரானும் அவருடனேயே திரும்பி வந்திருப்பான் என்று கமலி எதிர்பார்த்தாள். புள்ளலூர்ப் போரில் வெற்றி மாலை சூடிய வீரரை வரவேற்க நகர மாந்தரெல்லாம் திரண்டு போனபோது கண்ணபிரானின் தந்தை தாம் போய்க் கண்ணனை அழைத்து வருவதாகச் சொல்லிவிட்டுப் போனார். இரவு வெகுநேரம் கழித்து அவர் திரும்பி வந்து, மாமல்லருடன் கண்ணன் வரவில்லை என்னும் செய்தியைத் தெரிவித்தார்.

காஞ்சி நகரில் யாருமே அன்றிரவு தூங்கவில்லையாதலால், மூன்றாம் ஜாமத்தில் சக்கரவர்த்தியும் திரும்பி வந்துவிட்ட விவரம் கிடைத்தது. நாலாம் ஜாமத்தில் வாதாபிப் படைகள் கோட்டைக்குச் சமீபத்தில் வந்துவிட்ட செய்தியும், கோட்டை வாசல்கள் அடைக்கப்பட்டுப் பாலங்கள் தகர்க்கப்படும் செய்தியும் கிடைத்தன.

ஆகவே, இனிமேல் கண்ணபிரான் கோட்டைக்குள்ளே வந்து சேருவதற்கே இடமில்லையென்று ஏற்பட்டது.

இதனாலேதான் கமலி துயரக் கடலில் ஆழ்ந்திருக்க, கண்ணனுடைய

தந்தை அவளுக்கு ஆறுதல் சொல்லிக் கொண்டிருந்தார்.

அந்தச் சமயத்தில் திடீரென்று சாக்ஷாத் கண்ணனே வீட்டு வாசலில் வந்து நின்றால், அவர்களுக்கு எப்படி இருந்திருக்கும்?

கமலி சட்டென்று எழுந்து, "கண்ணா!" என்று அலறிக் கொண்டு ஓடிப் போய் அவனைத் தழுவிக் கொள்ள எண்ணியவள், கண்ணனுக்குப் பின்னால் சக்கரவர்த்திப் பெருமான் குதிரையில் வருவது கண்டு நாணமும் திகைப்பும் அடைந்து நின்றாள்.

"கமலி! கண்ணனைக் கொண்டுவந்து சேர்த்துவிட்டேன். இனிமேல் அவனை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்வது உன்னுடைய பொறுப்பு!" என்று சக்கரவர்த்தி புன்னகையுடன் கூறினார்.



பிறகு, "உன்னுடைய சௌக்கியத்தைப் பற்றிச் சிவகாமி ரொம்ப விசாரித்தாள் அம்மா! உனக்கு ஆண் குழந்தை பிறந்தால், உடனே சொல்லி அனுப்பும்படி கூறினாள்" என்று சொல்லிக் கொண்டே சக்கரவர்த்தி குதிரையைச் செலுத்திக் கொண்டு போனார்.

சக்கரவர்த்தியின் பேச்சினால் வெட்கமடைந்த கமலி கண்ணபிரானைக் கடைக் கண்ணால் பார்த்துக் கொண்டே வீட்டுக்குள் சென்றாள். கண்ணபிரான் தந்தைக்கு முகமன் கூறிவிட்டுக் கமலியைத் தொடர்ந்து உள்ளே சென்றான்.

"இதென்ன கமலி! நான் வந்ததில் உனக்குச் சந்தோஷம் இல்லையா! என்னைத் திரும்பிக்கூடப் பாராமல் உள்ளே வந்துவிட்டாயே! ஒரு வேளை கண் தெரியவில்லையா?" என்று கண்ணபிரான் கேட்க, கமலி, "ஆமாம்; கண் தெரியவில்லைதான்! இரவெல்லாம் அழுது வீங்கிப் போய் விட்டது" என்றாள்.

"ஐயோ! ஏன் அழுதாய்?" என்று சொல்லிக் கொண்டு, கண்ணபிரான் அவள் அருகில் நெருங்க, கமலி அவனுடைய கையை உதறி, "இந்த அருமையெல்லாம் நேற்று எங்கே போய்விட்டது? நேற்றிரவே ஏன் வரவில்லை?" என்று கேட்டாள்.

"நேற்றிரவே ஏன் வரவில்லையா? எனக்கும் உனக்கும் மத்தியில் ஒரு பெரிய அகழியும் முதலைகளும் ஒரு பெரிய மதிற்சுவரும் இருந்தபடியாலே தான்" என்றான் கண்ணன்.

"அப்படியா? நீ இரவெல்லாம் கோட்டைக்கு வெளியிலா இருந்தாய்? அகழிப் பாலங்களையெல்லாம் இரவுக் கிரவே உடைத்துவிட்டார்களாமே. நீ எப்படி உள்ளே வந்தாய்? நீ புறப்பட்டது முதல் நடந்ததையெல்லாம் விவரமாகச் சொல்" என்று கமலி பரபரப்புடன் கேட்டாள்.

"கமலி! நான் என்னத்தை என்று சொல்ல! நான் பிறந்த கதையைச் சொல்லவா, வளர்ந்த கதையைச் சொல்லவா? புள்ளலூர்ப் போர்க்களத்துக்கு நான் போன கதையைச் சொல்லவா? வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டு திண்டாடியதைச் சொல்லவா? மாமல்லர் ஏற வேண்டிய ரதத்தில் புத்த பிக்ஷுவை ஏற்றிக் கொண்டு வந்ததைச் சொல்லவா? கோட்டைக்கு வெளியே ராத்திரியெல்லாம் அலைந்து திரிந்ததைச் சொல்லவா?" என்றான் கண்ணன். பிறகு தான் காஞ்சியிலிருந்து கிளம்பியது முதல் நடந்த அதிசயமான சம்பவங்களை யெல்லாம் விவரமாகக் கூறினான்.

வராக நதிக் கரையில் புத்தபிக்ஷுவை ரதத்தில் ஏற்றிக் கொண்டு புறப்பட்ட பிறகு நடந்த சம்பவங்களைப் பற்றிக் கண்ணபிரான் கூறிய வரலாறு பின்வருமாறு :

குதிரைகளைக் கண்ணபிரான் எவ்வளவு வேகமாகத் துரத்திய போதிலும் புத்த பிக்ஷுவுக்குப் போதவில்லை. மேலும் மேலும் அவசரப்படுத்தினார். வழியில் இரண்டு இடங்களில் குதிரைகளை மாற்றிக் கொண்டு, அஸ்தமித்து, ஒரு நாழிகைக்குப் பிறகு காஞ்சிக் கோட்டையின் தெற்கு வாசலை அடைந்தார்கள்.

பிறகு, புத்த பிக்ஷு சொன்னபடி அகழி ஓரமான சாலையின் வழியாகக்

கண்ணபிரான் ரதத்தைச் செலுத்திக் கொண்டு போனான். கொஞ்ச தூரம் போனதும் பிக்ஷு ரதத்திலிருந்து இறங்கிக் காட்டுக்குள் நுழைந்து போனார். சற்று நேரத்துக்கெல்லாம் அகழியில் படகு செல்லும் சத்தம் கேட்கவே, கண்ணபிரான் அந்தத் திசையில் கூர்ந்து நோக்கினான். அப்போதுதான் கீழ்வானத்தில் சந்திரன் உதயமாகியிருந்தது. நீண்டு பரந்த மர நிழல்களுக்கு மத்தியில் ஆங்காங்கு ஊடுருவி வந்த நிலாக் கிரணங்களின் சஞ்சல ஒளியில், அகழியில் ஒரு படகு போவதும் அதில் இரண்டு பிக்ஷுக்கள் இருப்பதும் கண்ணபிரானுக்குத் தெரிந்தன. படகு அக்கரை சென்றதும் இருவரும் இறங்கினார்கள். கோட்டை மதிலின் சுவரோரமாகச் சென்றார்கள். திடீரென்று இருவரும் மாயமாக மறைந்தார்கள்.



கண்ணபிரான் நெடுநேரம் வரையில் அங்கேயே காத்திருந்தான். என்ன செய்கிறதென்று அவனுக்குப் புரியவில்லை. அவர்கள் எப்படி மறைந்திருப்பார்கள் என்று மூளையைச் செலுத்தித் தீவிரமாக யோசனை செய்தான். ஒருவேளை கோட்டைச் சுவரில் இரகசிய வழி இருக்குமோ என்ற எண்ணம் தோன்றியதும் அவனுடைய உள்ளம் கலங்கியது. புத்த பிக்ஷு தன்னை அங்கேயே இருக்கச் சொல்லி இருப்பதால் எப்படியும் திரும்பி வருவார் என்றும், அப்போது இரகசியத்தைக் கண்டுபிடிக்கலாம் என்றும் எண்ணிக் கோட்டைச் சுவரில் அவர்கள் மறைந்த இடத்தில் வைத்த கண்ணை வாங்காமல் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். எப்படியோ அவனை அறியாமல் தூக்கம் வந்து கண்ணயர்ந்துவிட்டான். திடீரென்று அவன் கண் விழித்தபோது, தூரத்தில் கடல் குமுறிப் புரண்டெழுந்து வருவது போன்ற பயங்கரமான சத்தம் கேட்டது. முன்னொரு சமயம் ஏரி உடைத்துக் கொண்டு வெள்ளம் வந்த சத்தத்தை அவன் கேட்டிருக்கிறபடியால், மிக்க பீதியடைந்தவனாய், பரபரப்புடன் ஒரு மரத்தின் மேல் ஏறிச் சத்தம் வந்த திசையை நோக்கினான். வெகு தூரத்தில் வெண்ணிலாவின் ஒளியில் யானைகளும், குதிரைகளும், குடைகளும், கொடிகளும், வேல்களும், வாள்களுமாய்த் திரண்டு வந்த சேனா சமுத்திரத்தைக் கண்டான். வாதாபி சைனியந்தான் அது என்று தெரிந்து கொண்டு, எப்படியாவது கோட்டைக்குள் புகுந்துவிட வேண்டும் என்று தீர்மானித்து ரதத்தை அவசரமாகச் செலுத்திக் கொண்டு தெற்குக் கோட்டை வாசலை அணுகினான். கண்ணபிரான் சத்தம் போட்டுக் கோட்டைக் காவலாளிகளை அழைத்ததில் ஒன்றும் பலன் இல்லை. சற்று நேரம் அங்கேயே தயங்கி நின்ற பிறகு ஒரு யோசனை உதித்தது. 'புத்த பிக்ஷுக்கள் புகுந்த இரகசிய வழி ஒருவேளை தேடினால் கிடைக்கும்; அதன் வழியாகக் கோட்டைக்குள் போய்விடலாம்' என்ற ஆசையுடன் திரும்பவும் அதே இடத்துக்கு வந்து சேர்ந்தான். அகழியை எப்படிக் கடப்பது என்ற கேள்வி ஏற்பட்டது. நீந்திப் போகலாம்

அடுத்த இதழில்:



நம்மைச் சுற்றி....

பி.எம்.ஆர்.

என்று நினைத்ததும், அகழியில் நூற்றுக் கணக்கான முதலைகள் இருப்பது நினைவு வந்து கதி கலங்கிற்று. இதற்குள்ளாகப் படைகள் வரும் முழக்கம் இன்னும் நெருங்கிக் கேட்கலாயிற்று.

'முதலைகளுக்கு இரையானாலும் ஆகலாம்; எதிரிகளிடம் சிக்கக் கூடாது' என்று எண்ணிக் கண்ணபிரான் அகழியில் இறங்கத் தீர்மானித்த போது திடீரென்று கோட்டை மதிலின் எதிரே ஒரு கதவு திறந்து துவாரம் காணப்பட்டது. அதற்குள்ளிருந்து இளம் புத்த பிக்ஷு ஓடி வருவது தெரிந்தது. கண்ணபிரான் சட்டென்று மரத்தின் பின்னால் மறைந்து கொண்டான். இளம் பிக்ஷு படகில் ஏறுவதையும், இக்கரைக்கு அதைச் செலுத்தி வருவதையும் பார்த்துக் கொண்டிருந்தான். அப்போது கண்ணபிரானுடைய மூளை தீவிரமாக வேலை செய்தது. இளம் பிக்ஷு கரையில் இறங்கியவுடனேயே படகைத் தண்ணீரில் கவிழ்க்கப் போவதைப் பார்த்ததும் கண்ணன் பாய்ந்து வந்து அதைத் தடுத்து, இளம் பிக்ஷுவையும் தூக்கிப் படகில் போட்டுக் கொண்டு, தானும் ஏறினான். மெதுவாகப் படகை அக்கரைக்குக் கொண்டு போய்ச் சேர்த்தான்.

சுவரில் திறக்கப்பட்ட துவாரம் அப்படியே இருந்தது. இளம் பிக்ஷுவை அந்தத் துவாரத்துக்குள் தள்ளிவிட்டு, தானும் உள்ளே புகுந்தான். அகழிக்கு அப்பால் அவன் நிறுத்திவிட்டு வந்த ரதத்தின் ஞாபகம் வந்தது. அந்த நினைவினால் அவன் திரும்பி வெளியே வரப் பார்த்த போது மிகவும் உறுதி வாய்ந்த வஜ்ரக் கையொன்று தன்னைப் பிடித்து உள்ளே தள்ளுவதை உணர்ந்தான். அந்தக் கை மகேந்திர பல்லவருடைய வைரம் பாய்ந்த கைதான் என்பதை உணர்ந்ததும் கண்ணனுடைய ஆச்சரியம் அளவுகடந்ததாயிற்று. அப்போது சக்கரவர்த்தி, "கண்ணா! இந்தக் கள்ள பிக்ஷு பல்லவ இராஜ்யத்தில் இருந்த வாதாபியின் கடைசி ஒற்றன். இவன் தப்பிப் போகாதபடி தடுத்ததால், பல்லவ சாம்ராஜ்யத்துக்கு ஒரு மகத்தான சேவை செய்திருக்கிறாய். வா, போகலாம். கமலி உனக்காகக் கவலையுடன் காத்திருக்கிறாள்" என்று சொல்லிக் கொண்டே அந்த இரகசிய வாசலுக்குள்ளே தாமும் நுழைந்து இரகசியக் கதவை உள்ளிருந்தபடியே சாத்தினார்.

அவர்கள் புகுந்த இடம் காஞ்சி நகரின் பிரசித்தமான இராஜவிஹாரம் என்று விரைவில் கண்ணனுக்குத் தெரிந்தது.

* * *

மேற்கண்ட வரலாற்றை எல்லாம் கூறிவிட்டு, கண்ணபிரான், "கமலி! ஏதோ உன்னுடைய மாங்கல்ய பலத்தினால்தான் நேற்றிரவு நான் பகைவர்களிடம் சிக்காமலும், முதலைகளுக்கு இரையாகாமலும் பிழைத்து வந்தேன். நான் பிழைத்து வந்தது உண்மைதானா என்று இன்னமும் எனக்குச் சந்தேகமாய்த்தான் இருக்கிறது. உன்னுடைய இரண்டு தளிர் போன்ற கைகளினாலும் என்னைக் கட்டிக் கொண்டு பார்த்து, நான் உண்மையில் உயிரோடுதான் இருக்கிறேனா என்று சொல்லு" என்றான்.

"முடியாது, கண்ணா! முடியாது! உன்னை நான் கட்டிக் கொண்டால் சின்னக் கண்ணனுக்குத் தொந்தரவாயிருக்கும்!" என்று கூறிவிட்டுப் பொருள் பொதிந்த புன்னகை புரிந்தாள் கமலி.






# நேற்று...இன்று.....நாளை

இரண்டு வேஷங்களில் எம். ஜி. ஆர். (ஆனால் வழக்கம்போல் இரட்டைப் பிறவி யல்ல! அடேயப்பா! பெரிய மாறுதல் இல்லையா?) ராஜஸ்ரீ, மஞ்சுளா, லதா மூன்று கதாநாயகிகள். இருவருக்கு ஏமாற்றம்; ஒருத்திக்குத்தான் வெற்றி. எதற்காகவும் அழுது, கண்ணீர் வடித்துச் சிரமப்படாமல், எதிலும் சுலபமாக வெற்றி பெறும் வாய்ப்புப் படைத்த ஹீரோ, எம். ஜி. ஆர்.

சுயவர்களின் சதித் திட்டங்களை முறிய டித்து, அவர்களது மாயத் திரையைக் கிழித் தெறிந்து வழக்கம் போல் எம். ஜி. ஆர். வெற்றிவாகை சூடும்போது ரசிகர்களின் வழக்கமான ஆரவாரக் கையொலி வேண்டு மட்டும் கிடைக்கிறது.

எம். ஜி. ஆர். மிகவும் இளமையாகத் தோன்றுகிறார்; சண்டைக் காட்சிகளில் தமக்கே உரிய வாகவத்தை அருமையாக வெளிப்படுத்துகிறார். கனவிலும், நனவிலும், பலவித உடைகளில் காட்சி தருகிறார். வர்ண ஜால அலங்கார ஒளிவிளக்குகளின் பிரகாசத் தில் மூன்று பெண்களுடனும் காதல் காட்சி களில் ஜமாய்க்கிறார்! கட்சி அரசியல் கருத் துக்கள் பொதிந்த உரையாடல்கள் ரசிகப் பெருமக்களின் உற்சாகமான வரவேற்பைக் கையொலியுடன் பெறுகின்றன.

அநாதைப் பெண் மஞ்சுளாவுக்கு நல்ல வாய்ப்பு. நன்றாய் நடித்திருக்கிறார். காதலில் ஏமாற்றம் அடைந்த பாகத்தை லதா ஏற்றுச் சிறப்பாய் நடித்திருக்கிறார். கணவனை ஒரு விபத்தில் இழந்து, சித்தசுவாதீனத்தை இழந்த பெண்ணாக வரும் ராஜஸ்ரீ பாராட்டும் வண்ணம் நடித்திருக்கிறார்.

அசோகன், தேங்காய் சீனிவாசன் இரு வரும் வில்லன்கள். படத்தை ஓட்டிச் செல்ல நன்கு பயன்பட்டிருக்கின்றனர்.

சிறந்த ஒளிப்பதிவுக்கு ஏ. சண்முகம், அமிர்தம் இருவரும் பாராட்டுக்குரியவர்கள்.

புலமைப்பித்தனின் "பாடும்போது நான் தென்றல் காற்று" என்ற பாட்டு இரண்டு மூன்று முறை கேட்டும் அலுப்புத் தட்ட வில்லை. எஸ். பி. பாலசுப்பிரமணியம் பாடு கிறார். கவிஞர் வாலியின் "நான் படித்தேன் காஞ்சியிலே" என்ற பாட்டு டி. எம். சௌந்தரராஜன் குழுவினரின் குரலில் கம்பீரமாக ஒலிக்கிறது. "நீ என்ன சொன்ன லும் கவிதை" (புலமைப்பித்தன் இயற்றியது) என்ற பாடல் டி.எம்.எஸ்., பி. சுசீலா இருவர் குரலிலும் அற்புதமாக ஒலிக்கிறது. (நீண்டகாலத்துக்குப் பிறகு தமிழ்ப் பாடல் களைப் பாராட்டி எழுத வாய்ப்புக் கிடைத்த மைக்கு நன்றி!) இசையமைப்புக்கு 'மெல் லிசை மன்னர்' எம். எஸ். விசுவநாதன் பாராட்டுப் பெறுகிறார்.

இப்படத்தின் கதையை எழுதியவர் நெல்லை வெங்கடாசலம். வசனம், சொர்ணம்.

நடிகர் எஸ். ஏ. அசோகனின் நீண்டநாள் தயாரிப்பான "நேற்று இன்று நாளை" வரப் போகிறது என்று நேற்று, இன்றல்ல—நீண்ட நாட்களாக எதிர்பார்க்கப்பட்டு வந்த படம். இன்று 'நல்லதோர் எதிர்ப்போடு' வெளி வந்திருக்கிறது!

"ரெக்ஸ் பேகிங் பவுடர்

# உபயோகித்து, மென்மையாக சுவைபடத் தயாரிக்கப்பட்ட கேக்குகளை என் தேநீர் விருந்துகளில் அனைவருமே விரும்புகின்றனர்"



என்கிறார் திருமதி சுலோசனா ராவ்,
'ஹரி நிவாஸ்', 95, மர்ராடபள்ளி, சிகந்தராபாத்,
ஆந்திர பிரதேஷ்



கேக், பிஸ்கோத்து, பக்கோடா, பூரி, குலாப் ஜாமூன் ஆகியவற்றை சுவைபட அதி மென்மையாகத் தயாரிக்க மிகவும் உதவுகிறது, ரெக்ஸ் பேகிங் பவுடர். சிறிதளவே சிறப்பாகச் செய்து முடிக்கிறது. அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன் பக்குவப் படுத்தப்பட்டிருப்பதால், பேகிங் பவுடர்களில் மிகவும் சிறந்தது ரெக்ஸ் பேகிங் பவுடர்.

"சீசமாலம் புடிச்ச வெய்யில், இப்படிக் கண்ணு மண்ணு தெரியாம காயுது!" — நெற்றியில் ஒழுகிக் கொண்டிருந்த வியர்வையை வழித்து விட்டுக் கொண்டாள் சின்னக்கண்ணு. அவளைச் சுற்றி நண்டுஞ் சிண்டுமாக ஆறு குழந்தைகள். இடுப்பில் ஒன்று மூக்கில் சளியோடு தூங்கிக்கொண்டிருந்தது. போதாக்குறைக்கு வயிறு வேறு மேடு கட்டியிருந்தது.

முந்தானையால் கைக்குழந்தைக்கு வழிந்த வியர்வையைத் துடைத்து விட்டாள். "இந்தக் கவிராத்துப் பஸ்ஸு எப்ப வந்து ஒழியுமோ; புள்ளேங்க கருவாடா காயுது..."

"யம்மோவ்! காலு கடுதும்மா..." பெரிய பெண் மணிமேகலை காலை உதறிக் கொண்டாள். வேதனையாக இருந்தது. ஆனாலும் சின்னக் கண்ணு வெளியில் காட்டிக் கொள்ளவில்லை. "கய்தே, கய்தே! ஒண்ணை விடச் சின்னதுங்க செவனேன்னு நிக்குது. உங்கப்பனுக்கு வெவஸ்தை இருந்தாத்தானே...? தனக்கே செருப்பு வாங்கிக்க முடியலே... உங்களுக்கு என்னத்தைச் செய்யறது..."

தொலைவில் பஸ் வருவது தெரிந்தது.

"டேய் கண்ணு பாண்டியா! முழிச்சுக்கடா, பஸ் வருது" என்று கத்திக்கொண்டே மூக்கில் ஒழுகிய சளியைத் துடைத்து விட்டாள். கணவன் செல்லத்துரை வண்டி இழுப்பவனானாலும், தான் சார்ந்திருந்த கட்சிக்குத் துரோகம் செய்யாமல் பிள்ளைகளுக்குப் பெயர் வைத்திருந்தான்.

குடை சாய்வது போல் பஸ் வந்து நின்றது. கூட்டம் எக்கச்சக்கம். ஆனாலும் ஏழு டிக்கட்டுகளை விட்டுச் செல்ல மனம் வருமா?

"ம்ம்...ம்...! ஃபுட் போர்டுலே நிக்காதே! மேலே ஏறிக்கோ!" — முறைமைக்கு எல்லோருக்கும் சொல்வது போலத்தான் சின்னக் கண்ணுவையும் அதட்டினார் கண்டக்டர்—நடத்துநர்!

"ஐயா! கொஞ்சம் ஒதுங்கி இடம் விடுங்கய்யா! குழந்தைங்க நசுங்கிச் செத்துடும் போல இருக்கு!" — சின்னக்கண்ணு அழமாட்டாக் குறையாகக் கெஞ்சிக் கொண்டே தானும் எப்படியோ ஏறிக் கொண்டாள்.

டிக்கட்டைக் கிழித்துக் கொண்டே, "ஏம்மா! அளவோடு பெற்று வளமோடு வாழுங்கன்னு கவர்ன்மெண்டு தெருவுக்குத் தெரு எழுதி வைச்சிருக்கே... உனக்குப் படிப்புத் தெரியாதா?" கிண்டலாகக் கேட்டார் கண்டக்டர். தேவையில்லாததுதான். நடத்துநர் சிலருக்குத்தான் இப்போது நா நீண்டிருக்கிறதே!



''உன் கண்ணுலே கொள்ளி வைக்க! நீயாய்யா சோறு போடறே?''

ஆண் பெண் பேதமின்றி ஒருமைப்பாட்டுடன் உரசிக் கொண்டு நின்றிருந்தவர்களில் சிலர் சிரித்தனர். அத்துடன் விட்டானா சின்னக்கண்ணு?

''ஏப்பா கண்டக்டரு! இந்தக் கவர்ன்மெண்டா(ன்) உங்களுக்கு எதுவும் போர்டு போடலியே? 'அளவோடு ஏத்தி, உயிரோடு சேருங்கள்'னு போர்டு போடச் சொல்லலாமே! இருக்குறன் போர்டு எதுக்கய்யா?''

சின்னக்கண்ணு படித்தவர்களை விட ஒரு படி மேலே நின்று பேசினான்.

'அட ஏழையா யிருந்தாலும் கோழையா இல்லாமப் பேசறானே இந்தப் 'பொம்பளை'—என்று பல டெரிலின், டெரிகாட்டன்கள் மனத்துள் நினைத்துக் கொண்டன.

மேலும் மேலும் ஆட்களை ஏற்றி நிரப்பிக் கொண்டே பஸ் விரைந்து கொண்டிருந்தது.

# ஓவர் லோட்



கோவி. மணிசேகரன்

சின்னக்கண்ணு பெரியார் சாலையில் இறங்க வேண்டும். புதுப்பேட்டையில் நடந்த ஒரு திருமணத்துக்கு விஜயம் செய்து விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தான். அங்கேயும் இப்படித்தான், வாயாடிவிட்டுப் பசியோடு திரும்ப நேர்ந்து விட்டது. யாரோ ஒரு முக்கியஸ்தர், ''இப்படி வசவசன்னு பேத்துக்கிட்டு வயித்தை ரொப்ப வந்துட்டா! ஒரு ரூவா மொய் எழுதிட்டு, நுன்பது ரூபா சாப்பாட்டை முழுங்கிறு என்னவறது?'' என்று இடிகெத்தது சின்னக்கண்ணுவின் காதுகளில் விழுந்து விட்டது. அந்த விநாடியே குடிசையை விட்டு வெளியேறி, ''யாருய்ய்டா, யோவ்! ..ந்நாமத்து! என் அண்ணன் வீட்டுக் கண்ணாலமாச்சேன்னு புள்ளைங்களைக் கூட்டியாந்தேன்ய்யா! வயித்துக்குச் சோறு இல்லாம இல்லே. ஏய், மணிமேகலே, கண்ணகி... கரிகாலா... அஞ்சுகம்....'' என்று பெயர்களைச் சொல்லிச் சத்தம் போட்டுக் கொண்டே புறப்பட்டு விட்டான். கேள்விப்பட்ட உடன்பிறந்தான் ஓடிவந்து அவனை வழிமறித்து நின்றான்.

''சின்னக்கண்ணு! அவரு என் முதலாளிம்மா... ஏதோ சொல்லிட்டாரு!''

''முதல்லே அந்தக் கயிராத்தை வெளியே போகச் சொல்லு...''

சொற்கள் சூடாக வெளிவந்தன.

அண்ணனுனா அண்ணுமலே அதற்கு மேலும் வழிமறிப்பானு? முதலாளி முக்கியமாயிற்றே!

பஸ்ஸில் மூச்சு விட இடமில்லே. இந்த நிலையில் ஒரு வாலிபனுடைய பேண்ட் பின் புறப் பையிலிருந்து எவனோ ஜேப்படி அடித்து விட்டு இறங்கி விட்டான். கூட்டத்தில் யாரைக் கண்டு எவனைப் பிடிப்பது? அரசாங்

கப் பணம் கண்டக்டரிடம் பாதுகாப்பாக இருந்தால் போதாதா?

சின்னக்கண்ணு சுற்றுமுற்றும் பார்த்துப் பிள்ளைகளை அணைத்துக் கொள்வதில் மூழ்கியிருந்தாள். பசிவேறு வயிற்றைப் புரட்டியது. நிறைமாதக் கர்ப்பிணி. பஸ் போடுகிற ஆட்டத்தில் பிள்ளைகள் வேறு தடுமாறிக் கத்தின. எந்த நிமிஷத்தில் யாருக்கு 'ஆக்ஸிஜன்' செலுத்த நேரிடுமோ அல்லது எந்த நேரத்தில் பஸ்ஸுக்கு ஆக்ஸிடெண்ட் நேருமோ என்கிற நிலை. நெரிசல் தாளாமல் இடிபட்டது! ஃபுட் போர்டுகளில் புளியங் கொத்து மாதிரி ஆட்கள் தொத்திக்கொண்டிருந்தனர். ஒற்றைக் கண்ணைச் சாய்த்து பார்த்து ஓடுவது போல் பஸ் விரைந்து கொண்டிருந்தது.

''பஸ் எங்கேயோ சாயப் போவுது!''—ஒரு கிழவியம்மாள் அடிவயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டு உளறிக் கொட்டினாள்.

''இன்ஷுரர் பண்ணி இருப்பவர்களுக்குத் தேவலை'' என்றான் ஒரு குறும்புக்காரன்.

பஸ் நுங்கம்பாக்கம் லேக் ஏரியாவைக் கடந்து திரும்பியது.

வயிற்றில் எவனோ இடித்துவிட்ட வேதனையுடன், பிள்ளைகள் படுகிற அவஸ்தையைச் சரிக்கட்டித் தனக்கு ஏற்படுகிற மயக்கத்திலிருந்து சமாளித்துக் கொண்டிருந்தாள் சின்னக்கண்ணு.

மிக அதிகமான வளைவு கொண்ட அந்தத் திருப்பத்தில்—

பஸ் விழுந்து விடுமோ என்றுதான் வீதியில் செல்பவர்கள் நின்று வேடிக்கை பார்த்தனர். சாய்ந்த பக்கத்தில்; சக்கரம் பாரம் தாளாமல் அழுந்திக் கிரீச்சிட்டது.

''எதற்கும் ஓர் எல்லை யில்லையா? இப்படியா ஓவர்லோட் இருக்கணும்?''—பலரின் முணுமுணுப்பு கசமுசவென்று எழுந்தது. முனகிக் கொண்டவர்கள்தாம் 'ஓவர்லோட்' என்று தெரிந்தும் ஏறுகிறார்கள். என்ன செய்வது? அவசரம்; காரியம் முடிந்தால் போதும் என்கிற பரபரப்பு!

திருப்பம் முடித்ததும் ஓட்டுநர்—டிரைவர் 'ஸ்டியரிங்'கை உடைத்து நிலைக்குக் கொண்டு வருகிறபோது, ஓரத்தில் உட்கார்ந்து கொண்டிருந்த அந்தக் கிழவி பயந்து 'கோ'வென்று மரண ஓலம் எழுப்பி விட்டாள். கிழவியின் அந்த அரண்ட — கண் பிதுங்கிய — உயிர்மீது ஆசை கொண்ட அலறலைக் கேட்டுச் சின்னக்கண்ணுவின் பிள்ளைகள் சத்தமிடத் தொடங்கினர். இடுப்பிலிருந்த பாண்டியன்கூட 'வீல்' என்று கதறி விட்டான்.

பஸ்ஸின் — பேருந்தின் சாய்ந்த ஓட்டத்தின் காரணமாக உயிர்ப் போராட்டக் குரல்களைக் கேட்ட சின்னக்கண்ணு, ''ஐயோ! என் குழந்தைங்க! என் குழந்தைங்க!'' என்று ஒப்பாரியிட்ட வண்ணம் மயக்கம் கண்டு சாய்ந்து விட்டாள்! வண்டியில் ஒரே பரபரப்பு. ஆனாலும் பஸ் நிற்கவில்லை. ஏன்? கால்நடை மருத்துவமனை நிறுத்தத்தைக் கடக்கிறபோது, 'வீர், வீர்' என்று 'டபுள் விசில்' கேட்டது. அங்கே இறங்க வேண்டியவர்கள் ''போல், கண்டக்டர்! 'ஸ்டாப்பிங்' ஹோல்டான்!'' என்று கூவினர். நிறுத்துவதற்காகப் பொருத்தப்பட்டிருந்த 'பெல்'லை அடித்தனர். கேட்க வேண்டுமே நடத்துநர்—கண்டக்டர்! பின்னால் ஒரு பஸ் வேகமாக வருகிறதாம். அது முன் சென்று இருக்கிற பயணிகளை அள்ளிக் கொண்டு போய்விடுமாம்! கலெக்ஷனில் கமிஷன் என்னவது? இருக்கிற 'ஓவர்லோட்' போதாது போலும்!

பஸ் பெரியார் சாலையில் நின்றது.

ஏழைகள் சிலர் சின்னக்கண்ணுவுக்கு உதவியாயிருந்து இறக்கி விட்டனர். அந்தக் கிழவியும் உடன் இறங்கினாள்.

சின்னக்கண்ணுவுக்கு ஒரு சோடா வாங்கிக் கொடுத்தாள் கிழவி. பாவம், பிள்ளைகுட்டிக்காரி! பிள்ளைகள் விக்கலும் விம்மலுமாக ''அம்மா! அம்மா!'' என்று அலறின.

மயக்கம் தெளிந்த சின்னக்கண்ணு ஒருவாறு நிலைக்கு வந்து பிள்ளைகளை அணைத்துப் பிடித்துக் கொண்டு நடந்தாள்.

''அளவுக்கு மீறிப் பிள்ளைங்களைப் பெத்துக்கப் பணக்காரங்களே பயப்படறப்ப, இந்தப் பொண்ணுக்கு ஏன்தான் இந்தத் தலைவிதியோ!'' கிழவி பொக்கை வாயில் புகைந்த சொற்களுடன் நடையைக் கட்டினாள்.

பாலத்தைச் சின்னக்கண்ணு நெருங்குகிற போது — செல்லத்துரை — சின்னக்கண்ணுவின் கணவன் நெருப்பாய்க் கொட்டுகிற வெய்யிலில் நெற்றி வியர்வையைச் சுட்டு விரலால் வழித்துவிட்ட வண்ணம் கை வண்டியை இழுத்துக் கொண்டு எதிரே வந்து கொண்டிருந்தான்.

வண்டி நிறைய பாரம்! கைவண்டி இழுப்பவர்களுக்கும் 'ஓவர்லோட்' சட்டமிருந்தாலும் கவனிப்பார் யார்? கோபுரம் போல் குவித்திருந்த ஆற்று மணல் யார் வீடோ எழுந்து நிற்கச் சென்று கொண்டிருந்தது.

முக்கி முனகி எலும்புகளின் பூட்டுத் தரைக் கைவண்டி இழுத்து வரும் கணவனைக் கண்டு வயிறெல்லாம் பற்றி எரிந்தது சின்னக்கண்ணுவுக்கு.

''ஏன்'தே இப்படி ஓவர்லோடை இசுத்துக்கிட்டு வரணும்?'' என்று பற்றி எரிந்த வயிற்றுடன் பதைபதைத்தாள் சின்னக்கண்ணு! அரசாங்க பஸ்ஸுக்குத்தான் கேட்பாரில்லை! அவளுடைய புருஷனைக்கூடவா அவள் கேட்கக் கூடாது?

வண்டியை மெல்ல நிறுத்திவிட்டுக் கோழியின் பின்னால் செல்லும் குஞ்சுகளைப் போல ஓடிவரும் பிள்ளைகளைக் கண்ட செல்லத்துரை, ''அட, சீ, போமே! ஏழு பிள்ளைகளைப் பெத்துட்ட ஓவர்லோடை விட இது ஒண்ணும் எனக்குப் பாரமாத் தெரியலே!'' என்றான்.

சின்னக்கண்ணு பிள்ளைகளை அணைத்துக் கொண்டு நடந்தாள்.

''ஏ சின்னக்கண்ணு! ராத்திரிக்கு மொச்சைக் கொட்டைக் கத்தரிக்கா கொழும்பிலே நாலு கருவாட்டையும் போட்டு வை. இன்னிக்குப் பட்டையை ஓவராக் குடிக்கணும் போலத் தெரியுது!'' என்று சத்தமிட்டான் செல்லத்துரை.

சின்னக்கண்ணு காதுகளில் வாங்கியதும் வாங்காததுமாகப் பாலத்தின் அடிவாரக் குடிசைப் பகுதியை நோக்கி வேதனையுடன் சென்று கொண்டிருந்தாள்.

# வரி வசூல் மகசூல்!




நமது அரசு வரி வசூலில் தீவிரம் காட்டப் போகிறது
— செய்தி

ஆயுள் காலத்திற்கு அட்வான்ஸ் வரி கட்டியவர்களின் திருவுருவங்களைப் போஸ்டர்களாகப் போடலாமே!




" அலட்டிக்காமெ வரி கட்டறீங்களே, என்ன தொழில்?"

" கள்ள நோட்டு அச்சடிக்கிறது!"




இனம் கொடுத்தால் இப்படியும் நடக்கலாம் அல்லவா?




"பாக்கி வரி எப்ப கட்டப் போறே?"

" இன்னும் ரெண்டு தெரு போயிட்டு வந்துடறேன்!"




பகை இல்லாமல் நகையோடு வரி வசூல் செய்யலாம்!

**பொன்னியின் புதல்வர் என்ற தலைப்பில் அமரர் கல்கியின் வாழ்க்கை வரலாறு பிறந்ததற்கே ஒரு வரலாறு உண்டு!**



# பொன்னியின் புதல்வர் பிறந்த கதை!



எனது தகப்பனார் அமரர் கல்கி அவர்களின் நாவல்கள் ஒவ்வொன்றும் எவ்வளவு சுவையானதோ அதே அளவுக்குச் சுவையானதாக இருக்கும் அவரது வாழ்க்கை வரலாறு என்பது எனக்கு நன்றாகத் தெரியுமாதலால் நீண்ட காலமாகவே இது பற்றி யோசித்து வந்திருக்கிறேன்.

காரியாலய வேலைகளிலிருந்து அனுமதியுடன் விடுதலை பெற்று விஷயங்களைச் சேகரித்து நாமே எழுதிவிடலாமா என்றுகூடச் சிந்தித்ததுண்டு. ஆனால் அது சரியல்ல என்றும் தோன்றியது. தகப்பனாரின் வாழ்க்கை வரலாற்றை மகன் எழுதுவது முறையாகுமா?

எழுதுபவர் மூன்றும் மனிதராகவும் இருக்க வேண்டும். அதே சமயம் கல்கி அவர்களின் மனத்தையும் வாழ்க்கையையும் லட்சியங்களையும் நன்குபுரிந்து கொண்டவராகவும் இருக்க வேண்டும். சுவையாக எழுதும் ஆற்றல் மிக்கவராயும் இருக்க வேண்டும். விஷயங்களைச் சேகரித்து, இதே வேலையாக முழு மூச்சுடன் உழைக்க அவகாசம் உள்ளவராகவும் இருக்க வேண்டும்.

இப்படிப் பல ''இருக்க வேண்டும்''கள் பொருந்தி இருக்கக் கூடிய நபர் எங்கே எப்போது கிடைப்பார் என்று யோசித்தபடி இருந்தேன்.

இடையில் ஒரு முறை, ''இந்நாட்டில் எழுதப்படும் வாழ்க்கை வரலாறுகள் பல நாவல்களாகிவிடுகின்றன'' என்பதாக ராஜாஜி கூறியதும் எழுதியதும் என் மனத்தில் நிலைத்துச் சதா பயமுறுத்திக் கொண்டேயிருந்தது!

இத்தருணத்தில் சுந்தா அவர்கள் தினமணி கதிரில் தமது புதுடில்லி வாசத்தின் அநுபவங்களை எழுதத் தொடங்கினார். அதைப் படித்துப் பார்த்தபோது 'அடடா! இவரல்லவோ அமரர் கல்கியின் வாழ்க்கை வரலாற்றினை எழுதச் சரியான ஆசாமி! இத்தனை நாட்களாக இவரைப் பற்றி நினைக்காதிருந்து விட்டோமே' என்று தோன்றியது.

முன்னமேயே அவரை அணுகாததால் ஒன்றும் குடிமுழுகிப் போய்விடவில்லை என்றும் உடனுக்குடன் தெரிய வந்தது. ஏனெனில் சுந்தா அகில இந்திய ரேடியோவிலிருந்து அப்போதுதான் ஓய்வு பெற்றார். எனவே இனிமேல்தான் தமது நேரத்தை முழுமையாக இந்த வரலாற்றினை எழுதுவதற்கே செலவிட அவரால் முடியும் என்பது புரிந்தது. அவருக்குக் கடிதம் எழுதிக் கேட்டதும் யோசனை பண்ணாமல் உடனே மகிழ்ச்சியுடன் சம்மதம் தெரிவித்தார்.

சுந்தா வட்டத்தொட்டி நபர்களுள் ஒருவர். டி. கே. சி., ராஜாஜி, கல்கி, மகாராஜன், பாஸ்கரத் தொண்டைமான் போன்றவர்களுடன் நெருங்கிப் பழகி அவரது அன்பையும் அபிமானத்தையும் பெற்றவர். சிறந்த சிறுகதை எழுத்தாளர். நகைச்சுவைக் கட்டுரைகள் எழுதுவது மட்டுமின்றி ஹாஸ்யம் துள்ளும் நடைபோடக் கதா காலக்ஷேபமும் செய்தவர். நல்ல கவிஞர். தமிழிலக்கியங்களையும் மேனாட்டு இலக்கியங்களையும் ஆர்வத்துடன் நிரம்பப் படித்தவர். அகில இந்திய ரேடியோவில் அரும் பணியாற்றிப் படிப்படியாகப் பதவி உயர்வு பெற்று பி. பி. ஸி.யினால் லண்டனுக்கு அழைக்கப்பட்டவர். மூன்றாண்டு காலம் அங்கே தமிழோசைப் பகுதியின் பொறுப்பதிகாரியாக விளங்கியவர். கலைமகளும் விகடனும் இவருக்குப் பதக்கங்களை அளித்துக் கௌரவித்திருக்கின்றன.

இதெல்லாவற்றையும் விடக் கல்கி அவர்களின் தோழமையையும் பாராட்டையும் பெற்றுள்ளவர் திரு சுந்தா.

சுந்தாவின் கட்டுரையைப் படித்துவிட்டுக் கல்கி எழுதுகிறார்:

'' 'என் புத்தகங்கள்' என்னும் கட்டுரை வெகு அழகாக இருக்கிறது. எப்படி இவ்வளவு நன்றாய் எழுதி விட்டீர்கள் என்று அதிசயப்படுகிறேன் — தங்களுடைய திறமை தெரிந்திருந்தும்தான்! இம்மாதிரி இன்னும் அடிக்கடி கட்டுரைகள் எழுதி வரவேண்டும். ஆனால் அதில் ஓர் அபாயமும் இருக்கிறது! அதிகமாக எழுதினால் யாராவது ஒரு கிரிடிக் முன்வந்து தங்களுக்குத் தமிழ் நாட்டு ஏ.ஜி. ஜி. என்னும் பட்டத்தைச் சூட்டி விடுவார்!

''டி. கே. சி.யின் சங்கத்தை ரொம்பவும் சுவைத்து அனுபவித்துக் கொண்டிருக்கிறோம். தீபாவளி மலருக்கு ஓர் அழகான கதை (சுபமான முடிவுடன்) ஒரு ரசமான கட்டுரை இரண்டும் எழுதிவிட வேண்டும். சீக்கிரத்திலும் வர வேண்டும். —ரா.கி.''

''சுந்தா'' எனப் பிரபலமடைந்துள்ள திருநெல்வேலிக்காரர் திரு எம். ஆர். எம். சுந்தரம் அவர்களை முதன் முதலில் நான் சந்தித்தது குற்றாலத்தில் வைத்துத்தான். டி. கே. சி. அவர்களின் இல்லத்தில் தங்கியிருந்தோம். செண்பகாதேவிக்கு மெல்ல மலை ஏறிப் போவோம். தோசைக் கூடை முன்னாலேயே போய் எங்கள் வருகைக்காகக் காத்திருக்கும்! மரப் பாலத்துக்கு முன்னால் ஒரு மொட்டைப் பாறையில் அமர்ந்து டி. கே. சி. பாட்டுச் சொல்ல ஆரம்பித்து விடுவார். அப்பா உற்சாகமாகத் தலையாட்டி 'அடடா பேஷ்! பலே!' என்று கூறி வருவார். எனக்கோ தோசையின் நினைவும் திபுதிபுவென்று விழும் செண்பகா தேவி அருவியின் நினைவுமாக இருக்கும்.

''சிறுவர்கள் முன்னால் போவதானால் போகட்டுமே'' என்றார் தந்தை ஒரு சமயம். டி. கே. சி.யின் பேரன் தீப நடராஜன், என் சகோதரி, நான் மற்றும் சில சிறுவர்கள் எல்லாரும் புறப்பட்டு நடந்தோம். ஒற்றையடிப் பாதையில் சோலையினூடே சற்றுத் தூரம் போனபின் ஓர் ஆலமரத்தடி பாறை மீது ரிஷி ஒருவர் அமர்ந்திருக்கக் கண்டோம். பயபக்தியுடன் அவரை வணங்கி விட்டு மேலே செல்ல முற்பட்டபோது, ''குழந்தைகாள்! நில்லுங்கள்!'' என்று ரிஷி குரல் கொடுத்துக் கரம் உயர்த்தினார்! ஏதோ வேதாந்த விஷயமாகப் பேச ஆரம்பித்தார்! 'ஏதடா வம்பு; கம்பன் பாட்டுக்கு டிமிக்கி கொடுத்துவிட்டு வந்து ரிஷியின் உபதேசத்தில் அகப்பட்டுக் கொண்டோமே!' என்று சிறுவனாகிய நான் எண்ணி முடிவதற்குள் ரிஷி ஆலம் விழுது தாடியை அகற்றினார்! சடை விழுந்த கேசம் போலிருந்த விழுதுகள் நீங்கியதும் அந்த ஜடா மகுடதாரி நமது சுந்தா மாமாதான் என்பதைக் கண்டேன். எனக்கு ஆனந்தம் தாங்கவில்லை!

சிறுவனுக்குச் சிறுவனாய் இழைந்து விளையாடும் சுந்தா மாமா, பெரியவர்களுக்கு ஏற்பப் பெரியதனமாகவும் நடந்துகொள்ளும் தகுதி நிரம்ப உடையவர் என்பதையும் நான் சீக்கிரமே புரிந்து கொண்டேன். தமது ஆற்றலை அதிகமாகப் பறைசாற்றிக்கொள்ளாத அடக்கமுடையவராயினும் அது பூக்கடை போலத் தானாகவே மணம் பரப்பியது.

வாழ்க்கையை இரசிக்கத் தெரிந்தவரும் ரசனையோடு வாழ்க்கை நடத்துபவருமான திரு சுந்தா அவர்களைவிடத் தகுதியான ஒரு நபர் அமரர் கல்கி அவர்களின் வாழ்க்கை வரலாற்றை எழுதக் கிடைக்க மாட்டார் என்று நான் கருதியது எவ்வளவு சரி என்பதை சுந்தா அவர்கள் சீக்கிரத்திலேயே நிரூபித்து விட்டார்.

உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெற்றதும் இந்த வாழ்க்கை வரலாற்றை எழுதுவதாக ஒப்புக்கொண்டு தில்லியிலிருந்து சென்னைக்கு வந்தார். வரும்போதே இருநூறு ரூபாய்க்குப் புத்தகங்களை வாங்கிக் கொண்டு வந்தார்!

''இதெல்லாம் என்ன?'' என்று கேட்டபோது ''வாழ்க்கை வரலாறுகளைப் பிறர் எப்படி எழுதியிருக்கிறார்கள் என்பதை முதலில் பார்க்க வேண்டாமா?'' என்று திருப்பிக் கேட்டார். அவர் வாங்கி வந்திருந்த நூல்கள் அத்தனையும் மேல்நாடுகளில் பிரபலஸ்தர்களைப் பற்றி எழுதப்பட்ட வாழ்க்கை வரலாறுகள்!

''இதோ இந்த நூலைப் பாருங்கள்! நெப்போலியனின் வாழ்க்கை வரலாற்றை ஒரு நாவல் பாணியில் எழுதியுள்ளார் இந்த ஆசிரியர்! இதைப் பாருங்கள். பேர்ல் பக்கின் வாழ்க்கை வரலாறு! இது ஒரு பேட்டியின் வடிவில் அமைந்திருக்கிறது. இது டிக்கென்ஸின் வரலாறு. இதை அவர் எழுதிய கடிதங்களைக் கொண்டும் அவருக்கு எழுதப்பட்ட கடிதங்களைக் கொண்டுமே தொகுத்து அளிக்கிறார் இந்நூலாசிரியர்'' என்று இப்படியாக அந்த நூல்களைப் பற்றிக் கூறிக் கொண்டே போனார் சுந்தா. எனக்குத் தலை சுற்ற ஆரம்பித்தது!



''சுந்தா''

அடுத்தபடியாக சுந்தா கல்கியின் நூல்களையெல்லாம் படித்தார். ஏற்கெனவே படித்திருந்தவற்றை மீண்டும் புதுக் கண்ணோட்டத்தில் படித்தார். அப்புறம் கல்கியின் பல்வேறு பணிகளுக்கும் தனித் தனி நோட்டுப் புத்தகங்கள் போட்டுக் கொண்டு குறிப்பெடுக்கத் தொடங்கினார். சங்கீதப் பணிக்கு ஓர் இருநூறு பக்க நோட்டுப் புத்தகம், இலக்கியத்துக்கு நானூறு பக்க நோட்டுப் புத்தகம், சொற்பொழிவாளர் என்பதற்கு ஒரு நோட்டுப் புத்தகம், சமூகப் பணிக்கு ஒரு நோட்டுப் புத்தகம் என்று இப்படியாகச் சுமார் ஐம்பது அறுபது நோட்டுப் புத்தகங்களை வரிசையாக அடுக்கி, அவ்வப்போது கிடைக்கும் விவரங்களை அந்த அந்தத் துறைக்கு ஒதுக்கப்பட்ட நோட்டுப் புத்தகத்தில் குறித்துக் கொண்டார். பிறகு கல்கியின் உறவினர்கள், நண்பர்கள் அனைவரையும் சந்தித்துப் பேசித் தகவல்கள் சேர்த்தார். இவ்வளவும் செய்தபிறகு நோட்டுப் புத்தகங்களில் குறிக்கப்பட்டுள்ள வாழ்க்கை வரலாற்று நிகழ்ச்சிகளை கல்கி அவர்கள் தமது

**அடுத்த இதழில் "பொன்னியின் புதல்வர்" ஆரம்பம்**

இலக்கியப் படைப்புக்களில் எவ்வாறு கையாண்டிருக்கிறார் என்று ஆராயத் தொடங்கினார்! அதற்குக் குறிப்பு எடுத்தார்!

இதன் பிறகுதான் எழுதத் தொடங்கினார். அத்துடன் முடிந்ததா? எழுதியதை அடித்துத் திருத்தினார். பிறகு நகல் எடுத்தார். அவ்வப்போது கிடைக்கும் புதிய தகவல்களைச் சேர்த்துச் செப்பனிட்டார். என்னிடம் ''முடிந்தது'' என்று கூறி முப்பத்தாறு அத்தியாயங்களைத் தந்தார். அவற்றில் சிலவற்றை மீண்டும் பிடுங்கிக் கொண்டு போய்ச் சேர்த்தும் திருத்தியும் அடித்தும் கொணர்ந்தார்!

பொன்னியின் புதல்வர் கல்கி, தமிழ் இலக்கிய ஆகாயத்தில் வான வில்லின் வர்ண ஜாலங்களைச் சிந்தியவர் என்பதாலேயே இந்த வரலாறு ருசி மிகுந்ததாகிறது. அதோடு சுந்தாவின் கடுமையான உழைப்பும் அவர் இதை எழுதக் கையாண்டுள்ள யுக்தியும் சேர்ந்து சுவை கூட்டுகிறது. இந்த அளவுக்குப் பாடுபட்டு ஒரு வாழ்க்கை வரலாறு இதுவரை தமிழில் எழுதப்படவில்லை என்று துணிந்து கூறலாம். வாழ்க்கை வரலாறுகள் எப்படி எழுதப்பட வேண்டும் என்பதற்கு வழிகாட்டுவதுபோலிருக்கிறது சுந்தாவின் பொன்னியின் புதல்வரும் அதற்காக அவர் மேற்கொண்ட பிரயாசைகளும். நவீன தமிழ் இலக்கியத்தில் பொன்னியின் புதல்வர் பெருமிதத்துக்குரிய ஓரிடம் பெறும்.

இத்தகைய அரிய நூலை எழுத ஒத்துழைத்த அனைவருக்கும் நன்றி கூற வேண்டிய கடமையும் இருக்கிறது. சுந்தாவின் சார்பிலும் கல்கி காரியாலயத்தின் சார்பிலும் இதைச் செய்யும் போது விகடன் அளித்த ஒத்துழைப்பைக் குறிப்பிட்டுச் சொல்லியே ஆக வேண்டும். ஆசிரியர் திரு எஸ். பாலசுப்பிரமணியம் கோரிக்கை பிறந்த உடனேயே தாமதமின்றிப் பழைய ஆனந்தவிகடன் இதழ்களைப் பார்வையிட சுந்தாவுக்கு அனுமதி வழங்கினார். அதோடு விகடன் காரியாலயத்தில் சுந்தாவுக்குத் தனி அறை ஒதுக்கி இதர வசதிகளும் செய்து தந்தார். சிறிது காலத்துக்குக் கல்கி காரியாலயத்தின் ஒரு முக்கிய பணி விகடன் காரியாலயத்தில் நடந்து வந்தது!

நவசக்தி, விமோசனம் இதழ்களைப் பாதுகாத்து வைத்து சுந்தா அவற்றைப் பார்வையிட வழங்கிய மறைமலை அடிகள் நூலகமும் விசேஷ நன்றியறிதலுக்கு உரித்தாகிறது.

பொன்னியின் புதல்வர் அத்தியாயங்களைப் படித்து வந்தபோது எனக்குப் பல இடங்களில் மெய்சிலிர்த்தது; கண்கள் கலங்கின. அது என் தகப்பனாரைப் பற்றி நான் படித்து வந்ததால் இருக்கலாம். ஆனால் நான் அடைந்த உணர்ச்சிப் பிரவாகத்தை கல்கி வாசகர்கள் அடையாமல் போக மாட்டார்கள் என்பதும் எனக்குத் தெரியும். அவர்களுக்குக் கல்கி அந்நிய மனிதரா என்ன? எனக்கு அவரிடம் உள்ள பந்த பாசத்துக்கு எள்ளளவும் குறைந்ததில்லையே கல்கி நேயர்களுக்கு அவரிடம் உள்ள அன்பும் பாசமும்?

— கி. ராஜேந்திரன்

வட்ட மேஜை

# கல்லூரி மாணவர்களின் கோரிக்கைகள்!

'கடந்த 12ந் தேதி அடையாறு மத்திய பாலிடெக்னிக் கல்லூரியில் புதிதாகச் சேர்ந்த ப்ரீ - டெக்னிகல் மாணவர் வைத்தியநாதன் என்பவர் ஸீனியர் மாணவர்களின் 'ராகிங்'கின் விளைவாக அவமானமுற்றுத் தற்கொலை செய்து கொண்டார்' என்ற செய்தியைப் பத்திரிகையில் படிக்கையில் எங்களால் பெருகி வந்த கண்ணீரை அடக்க இயலவில்லை. இரு ஆண்டுகளுக்கு முன்பு இதே போல் ஒரு மாணவ உயிர் இக்கொடிய ராகிங்கிற்குப் பலியாகி யிருக்கிறது.

பள்ளியிலிருந்து புதிதாக வரும் மாணவர்களுக்குக் கல்லூரி மாணவர்களின் நடை உடை ஆர்ப்பாட்டம் இவைகள் பிரமிப்பாகத் தோன்றும். அந்தப் பிரமிப்பு பயமாக மாறுவது இயற்கை. அதற்காக அவர்களைக் கேலிப் பொருளாக்கி மகிழ்வது மூத்த மாணவர்களுக்கு விளையாட்டு என்றால் இவர்களால் எப்படிப் பின்னால் நல்ல பிரஜைகளாக ஆக முடியும்? இதனைச் சக மாணவர்கள் என்ற உரிமையோடுதான் கேட்கிறோம்.

இது குறித்து அரசு உடனடியாகத் தீவிர நடவடிக்கை எடுக்க வேண்டும். இந்த முறை பாதிக்கப்பட்டவர்களின் முறையீட்டுக்குப் பிறகு எடுக்கப்படும் நடவடிக்கை அடுத்த முறை சட்டமாகவே மாற வேண்டும் என்பதே எங்களின் வேண்டுகோள்.

செம்பனார்கோயில்
17-7-74 ஜி. அழகிரி ரகுநாத்

'ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவும்!' என்ற கட்டுரை மூலம் திரு நெ.து. சுந்தர வடிவேலு அவர்கள் செய்துள்ள பயன் தரும் சீர்திருத்தங்கள் பலவற்றையும் அறிந்து மகிழ்ந்தேன். சென்னை பல்கலைக் கழகம் குறித்து மாணவ சமுதாயத்துக்கு அவசியமான பல தகவல்களைத் தரும் நல்ல கட்டுரை.

ஆயினும் சென்னைப் பல்கலைக் கழகத்துக்கே உண்டான சில குறைபாடுகளையும், மாணவர் சமுதாயத்துக்கு இதனால் ஏற்படும் இன்னல்களையும் குறிப்பிடாமல் இருக்க முடியவில்லை. புதுமுக வகுப்பு மாணவர்களுக்கென சென்னைப் பல்கலைக் கழகம் நடத்தும் தேர்வில் முதல் பத்து மார்க்குகள் வாங்கியவர்களின் பெயர்கள் அறிவிக்கப்படுவதில்லை. எனக்குத் தெரிந்த வரையில், மற்ற இந்தியப் பல்கலைக் கழகங்கள் யாவும் அறிவிக்கின்றன. இதனால் சென்னை பல்கலைக் கழகத்தில் புதுமுக வகுப்பில் தேறும் மாணவர்களுக்குப் பல இன்னல்கள் ஏற்படுகின்றன. முதலாவதாக ஐ.ஐ.டி.யில் நேரடிப் பதிவுக்கென (Direct Admission) ஒதுக்கப்பட்டிருக்கும் இடங்கள் எங்களுக்கு மறுக்கப்படுகின்றன. இரண்டாவதாக, பல ஏழை மாணவர்களுக்குக் கிடைக்க வேண்டிய உதவித் தொகைகள் மறுக்கப்படுகின்றன.

சென்னை — 34
14—7—74 எஸ். ரங்கமோகன்

மிகச் சமீப காலம்வரை மருந்துகள் என்ருல் அடிப்படை மருந்துகளே தரப்பட்டன. பச்சிலை, சில மிருகங்களின் பால், சில செடிகளின் வேர், கஞ்சா, சில எண்ணெய்கள் போன்றவை. இவை உடலில் புரியும் ரசாயன மாற்றமே மருத்துவம். அனுபவ அறிவின் துணை கொண்டு நடந்த வைத்தியம்.

எல்லாத் துறையிலும் விஞ்ஞான முன்னேற்றம் ஏற்பட்டு, எதையும் ஆராய்ச்சி பூர்வமாக அறிந்து உணரும் அடிப்படை வளர வளர, மருந்தியலில் பெரிய மாற்றங்கள் நிகழத் தொடங்கின.

பச்சிலையிலோ, செடி வேரிலோ, பாலிலோ உள்ள மருந்து அம்சம் என்ன? பகுத்துப் பகுத்துப் பார்த்தால் அது ஒரு ரசாயனப் பொருளே. அதே குணங்களுடன் செயற்கையாகவே ரசாயனப் பொருள் தயாரிக்க முடிகிறது இன்று.

## ஆரோக்கியம் அழைக்கிறது

கிடைக்கும். இத்தகைய சோதனையகங்கள் நம் நாட்டில் பம்பாயிலும் லக்ஷ்மணபுரியிலும் டில்லியிலும் உள்ளன.

மற்றும் ஒரு சோதனை. எந்த ஒரு மருந்தும் நோயைக் குணப்படுத்துகிற போதே உடலுக்கும் ஆரோக்கியத்துக்கும் சிறிதளவு தீங்கு விளைவிக்கவே செய்யும். உடலுக்கு மருந்து அந்நிய விஷயம்தானே? எனவே மருந்தினுல் ஏற்படும் உடன் விளைவுகள் ஓர் அளவோடு நிற்குமா அல்லது தலைவலி நீக்கப் போய்த் திருகு வலியாக முடியுமா என்பதை ஆராய்வார்கள். சற்றுத் தீவிரமான உடன் விளைவுகளை ஏற்படுத்தக் கூடிய மருந்தாயிருந்தால் வேண்டாத உடன் விளைவுகளை முறியடிக்க என்னென்ன பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டும் என ஆராய்வார்கள்.

# மருந்து இயல் மாயங்கள்!

இன்று மருந்தியல் வியாபார அடிப்படையில் நடந்தாலும் அதன் பின்னே கருத்தான விஞ்ஞான ஆராய்ச்சி உள்ளது.

ஆயிரக் கணக்கில் ஆண்டுதோறும் புதிய மருந்துகள் தயாராகின்றன. இந்த இந்த இடருக்கு இவை இவை ஏற்றவை என்று தயாரிப்பாளர் அறிவிக்கலாம். ஆனுல் அவற்றை மருத்துவ உலகம் அப்படியே ஏற்பதில்லை. புதிய மருந்துகளைப் பலவிதச் சோதனைகளுக்கு உட்படுத்திய பிறகே மருந்தை மருந்து என ஒப்புக்கொள்ளும்!

உலகப் புகழ் பெற்ற மருந்துத் தயாரிப்பாளர்கள் தமது மருந்தின் தரத்தை எவ்வாறு அறிகிருர்கள்? முதலில் அவற்றைச் சில விலங்குகளுக்கு அளித்துப் பார்க்கிருர்கள். எந்த நோய்க்கான மருந்தோ அந்த நோயை முதலில் அந்த மிருகங்களுக்குத் தோற்றுவிப்பார்கள். பிறகு குணப்படுத்த இப்புது மருந்துகளை அளித்துப் பார்ப்பார்கள். நோயுற்ற மிருகங்களின் அருகிலேயே இருந்து, அவற்றுக்கு மருந்தால் ஏற்படும் மாறுதல்களை இரவும் பகலும் கவனமாகக் குறித்து, அவசியமானுல் மருந்தின் தீவிரத்தை ஏற்றியோ இறக்கியோ சீர்ப்படுத்துவார்கள். ஒரு புது மருந்து மனிதருக்குத் தரத் தகுதியுள்ள நல்ல தயாரிப்புத்தான் என்று புலப்பட்டாலும் கூட, அதைப் பெரிய அளவில் உற்பத்தி செய்து விற்பனைக்கு அனுப்பிவிட முடியாது. 'க்ளினிகல் டிரையல்' என்ற ஒரு சோதனையிலும் அந்த மருந்து தேற வேண்டும். குறிப்பிட்ட சில நோயாளிகளுக்கு மருந்தைக் கொடுத்து, மருந்தின் பயனைக் கண்டறிந்த பிறகே பெரிய அளவில் தயாரிப்புக்கு அனுமதி



■ பெனிசிலின் தயாரிப்பு

கர்ப்பிணிகளைச் சில மருந்து பாதிக்கும் தன்மையன; சில மருந்து அம்சங்கள் உடலிலேயே தங்கி, பல ஆண்டுகளுக்குப் பின்னர் வேறு ஒரு புது நோய் கிளம்பக் காரணமாவதும் உண்டு!

இதை யெல்லாம் நோக்குகையில் நோயாளிகள் விளம்பரத்தைப் பார்த்தோ, வேறு வகையிலோ தமக்குத் தாமே வைத்தியராகி மருந்து சாப்பிடுவது தவறு என்பது புலப்படும். உடல் உறுப்புக்களின் இயக்கம் ஒன்றுடன் ஒன்று இணைந்தவையாதலால் ஒரு கோளாறுக்கு உட்கொள்ளும் மருந்து வேறோர் உறுப்பையும் சிறிதளவாவது பாதிக்கும். இதை எவ்வளவு அனுமதிக்கலாம் என்பது வைத்தியருக்குத்தானே தெரியும்? தலைவலி, அல்லது வயிற்று வலி மாத்திரை தானே என்று அலட்சியமா யிருக்க வேண்டாம். எதுவும் சாதாரண மருந்தல்ல. சிலர் மருந்துகளுக்கு அடிமையாகி விடுவதையேகூடப் பார்க்கிறோம். எவ்வளவுக்கெவ்வளவு மருந்து அருந்துவதைக் குறைக்க முடிகிறதோ அவ்வளவுக்கு நல்லது. அதற்காக நோயை அலட்சியம் செய்யவும் கூடாது. ஆரோக்கிய வாழ்வுக்கு முயல வேண்டும்.

மருந்து எப்படி உடலில் வேலை செய்கிறது என்பதே ஒரு சுவையான ஆராய்ச்சி. வாய் வழி விழுங்குவது நல்லதா, ஊசி வழி செலுத்துவது நல்லதா? ஒரு மருந்து உடலுக்குள் சேர்ந்த எவ்வளவு நேரத்தில் அதன் வீரியம் உடலில் செயல்படத் தொடங்குகிறது? உடலின் எந்த எந்தப் பகுதிகளில் அது எவ்வாறு எவ்வளவு பரவிப் படர்கிறது? மருந்து உள்ளே சென்றதும் 'அது எந்த விதமான ரசாயன மாற்றத்தை அடைகிறது? அல்லது உடலில் எந்த விதமான ரசாயன மாற்றத்தை மருந்து ஏற்படுத்துகிறது? மருந்தின் பணி முடிந்ததும் அது உடலிலிருந்து எப்படி எந்த வழியாக வெளியேற்றப்படுகிறது என்பன பயனுள்ள சுவையான ஆராய்ச்சிகள்.

நோய் வந்தால், அதை எதிர்த்துப் போராடும் இயல்பு உடலுக்கே உண்டு. ஈரலும் நடு மார்பில் உள்ள தைமஸ் சுரப்பியும், லிம்ப் சுரப்பிகளும் உடல் ஆரோக்கியத்தின் காவல்காரர்கள். ஏதாவது தாக்க வந்தால் தற்காப்புக்குத் தயாராக இருக்க இவற்றுக்குத் தெரியும். உடனே ரத்தத்தில் ஒரு 'நோய் எதிர்ப்புப் படை' திரட்டப்படும். உடலின் இந்த இயல்பை அறிந்து கொண்டது ஒரு பெரும் விஞ்ஞான முன்னேற்றம். இந்தத் தத்துவத்தைப் பயன்படுத்தித்தான் பல நோய்த் தடுப்பு மருந்துகள் தயாராகின்றன. அம்மை மருந்து குத்தும் தத்துவமும் இதுவே.

உதாரணமாக, குதிரை போன்ற மிருகங்களுக்கு அளவாக நோய் வரச் செய்து, அந்த நோயை எதிர்க்க அவற்றின் உடல் திரட்டிக் கொள்ளும் புரதப் பொருள்களை (சீரம்) குதிரை ரத்தத்திலிருந்து பிரித்து எடுத்து, அதையே மருந்தாக்குகிறார்கள்.

'டானிக்கு'கள் உடலுக்குத் தேவையான ஊட்டச் சத்துக்கள் உணவில் போதிய அளவு இராத குறையை நீக்குகின்றன. நோய், மருந்தினால் குணமாகிய பின் பலவீனமடைந்த உடல் விரைவில் ஆரோக்கிய நிலை அடையவும் டானிக்குகள் உதவுகின்றன.

மருந்து பற்றிச் சில எச்சரிக்கைகள்:

டாக்டரைக் கேளாமல் எந்த மருந்தையும் அருந்தலாகாது. ஓர் எஞ்சினீயரின் யோசனையின்றி மாளிகை கட்டலாமா? வக்கீல் யோசனையின்றி வழக்கு நடத்தலாமா? வெறும் தலைவலியானாலும் ஆளுக்கு ஆள் வேறு வேறு காரணத்தால் வந்ததாக இருக்கும். மூளைக் கட்டியாகவும் இருக்கலாம்; ஜலதோஷமாகவும் இருக்கலாம்; அலுவலகக் கவலையாகவும் இருக்கலாம்! இது தெரியாமல் 'அவரை அந்த மருந்து குணப்படுத்தியது. எனக்கும் அதுவே சரி' என்று கொள்ளலாகாது.

மற்றோர் எச்சரிக்கை அதன் அளவு. வைத்தியர் கூறிய அளவுப்படியும் நேரப்படியும் மருந்து அருந்துவது முக்கியம். உடலில் மருந்து அம்சம் எந்த அளவில் தொடர்ந்து இருக்கிறது என்பதைப் பொறுத்தே சிகிச்சை. அதிகமாக அருந்தினால் விரைவில் குணம் ஏற்பட்டுவிடாது. சிக்கனமோ சோம்பலோ காரணமாக அளவுக்குக் குறைவாக அருந்தினால் நோய் குணமடையாமலே போகலாம். மருந்தே அருந்தாமல் இருப்பதும் ஒன்றுதான்; இப்படிப் போதிய அளவுக்குக் குறைவாக எடுத்துக் கொள்வதும் ஒன்றுதான்!

இன்று பாமரரும் பரவலாகத் தெரிந்து கொண்டுள்ள பெனிசிலின் போன்ற மருந்துகள், 'ஆன்டிபயாடிக்ஸ்' என்ற வகையைச் சேர்ந்தவை. இந்தக் கண்டுபிடிப்பு, கிருமி நோய்களைக் குணப்படுத்தும் முயற்சியில் ஒரு பெரிய முன்னேற்றம். இவற்றை ஒரு நாள் இரண்டு நாள் அருந்திடதுமே குணம் தெரியும். உடனே நிறுத்திவிடக் கூடாது. நோய் முன்னிலும் கடுமையாக மீண்டும் வரும். மருந்தும் தன் ஆற்றலை இழக்கும். எந்த மருந்தாயினும் வைத்தியர் விதித்தபடி கூடுதலோ குறைவோ இல்லாமல் குறித்த நேரத்தில் குறிப்பிட்ட அளவில் குறிப்பிட்ட நாட்களுக்குச் சாப்பிடுவது முக்கியம்.

ஆலோசனை: டாக்டர் **லலிதா காமேசுவரன்**
கட்டுரை: **தம்பி சீனிவாசன்**

அடுத்த இதழில்:

# நகர் வலம்

மாதமொரு நகரமாகச் சென்று
எழுதப்படும் பயணக் கட்டுரைகள்



# பிலிப்ஸ் ஃப்ளூரோஸென்ட் லாம்புகளின் ஒளித்திறனை நீடிக்க வைப்பது எது?

எலெக்ட்ரோடின் தரம், எமிட்டர் பேஸ்ட்டின் திண்மையும் அளவும், எமிட்டரின் இறுக்கமான ஒட்டும் திறன். இவைதான் ஃப்ளூரோஸென்ட் லாம்பின் உழைப்பு காலத்தை நிர்ணயிக்கின்றன. அதனால் பிலிப்ஸ், அவர்களது டங்ஸ்டன் ஒயர் எலெக்ட்ரோடுகளை இருமுறைகள் அல்லாது, மும்முறைகள் காயில் செய்கின்றனர். அதன் விளைவாக, மிக அதிகமான அளவில் எமிட்டர் பேஸ்ட் அவற்றுள் இணைந்துள்ளது. டங்ஸ்டன் ஒயரிலிருந்து ஒளியைத்தரும் காஸுக்கு எலெக்ட்ரான்களைச் செலுத்த ஓர் நல்ல இணைப்புச் சாதனமாக இந்தப் பேஸ்ட் இயங்குகிறது. லாம்பின் உழைப்பு காலத்தை நீடிக்க வைக்க இது ஓர் சிறந்த உத்தியாகும்.

## ட்ரிப்பிள் காயில்ட் எலெக்ட்ரோட்






பிலிப்ஸ் ஃப்ளூரோஸென்ட் லாம்புகளைப் பற்றி மேலும் அறிந்து கொள்வது லாபமளிக்கிறது.

PHL-7164A

## பிலிப்ஸ்

பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்



# விண்ணும் மண்ணும்

## 53. பழிக்குப் பழியா? பாதுகாப்புப் பணியா?

மந்திர உச்சாடனங்களாலும் இதர கிரியைகளாலும் சாந்தியின் ஆன்மா சாந்தி அடைந்துவிடும் என்றுதான் அவளுடைய குடும்பத்தினரும் நண்பர்களும் எண்ணினார்கள் — தனஞ்செயன் ஒருவனைத் தவிர. அவனுக்குத் தெரியும் அந்த அயோக்கியனைத் தண்டிக்காவிட்டால் சாந்தியின் நெஞ்சம் வேகாது. தனக்கும் வாழ்நாள் முழுவதும் அதற்குப் பின்னரும்கூட மன அமைதி கிட்டாது!

அவன் அடிக்கடி பல்வந்த் சிங்கைப் போய்ப் பார்த்தான். ஃபோனிலும் பேசினான். படிப்படியாக அந்த நீக்ரோ பற்றிய விவரங்கள் தெரிய வந்தன. அவன் ரிச்சர்ட் வில்லியம்ஸ் என்ற பெயரில் இந்தியாவில் நுழைந்திருக்கிறான். பம்பாய் விமான நிலையத்தில் சுங்க இலாகாவில் ஒரு சிறிய தகராறு. அதனால் அவன் முக ஜாடை அவர்களுக்கு நினைவிருக்கிறது. தனஞ்செயன் வர்ணித்ததற்குக் கிட்டத்தட்ட ஒத்துப் போகிறது.

எல்லாத் துறைமுகங்களுக்கும் சர்வதேச விமான நிலையங்களுக்கும் டி.எம்.ஐ. ஆட்கள் அனுப்பப்பட்டுக் கண்காணித்துக் கொண்டிருக்கிறார்கள். உள்நாட்டிலேயே அவன் தலைமறைவாகச் சுற்றிக் கொண்டிருக்கலாம் என்ற அம்சத்தையும் கவனத்தில் கொண்டு உள்துறை அமைச்சகத்தின் உதவியையும் கோரியுள்ளார் பல்வந்த் சிங். மொத்தத்தில் நாடு முழுவதும் சுமார் ஆயிரம் பேர்களாவது அவனைக் கண்டுபிடிக்க வேண்டும் என்ற ஒரே குறிக்கோளுடன் வலைய வந்து

கி.ராஜேந்திரன்



கொண்டிருக்கிறார்கள். இது தவிர போலீஸ் நிலையங்கள் எல்லாமே எச்சரிக்கப்பட்டுள்ளன. இது வரை கிடைத்துள்ள தகவல்களின் அடிப்படையில் பார்க்கும் போது அவன் இந்தியாவை விட்டு இன்னும் கிளம்பவில்லை என்ற முடிவுக்கே வரவேண்டியிருக்கிறது.

''இதையல்லவா முதலில் கூறியிருக்க வேண்டும் நீங்கள்! என் வயிற்றில் பாலை வார்த்தீர்கள்!'' என்றான் தனஞ்செயன்.

''இருக்கட்டும், நேரமாகிறது, நீ வீட்டுக்குப் போ; நானும் கிளம்புகிறேன். தகவல் ஏதும் கிடைத்த மறுகணம் உன்னுடன் டெலிஃபோன் தொடர்பு கொள்கிறேன். இரவு பகல் எந்நேரமாயினும் சரி, ரிச்சர்ட் வில்லியம்ஸ் பற்றிய விவரம் எது வந்தாலும் உடனே எனக்குத் தெரிவிக்க வேண்டும் என்பதாக உத்தரவிட்டிருக்கிறேன்'' என்றார் பல்வந்த் சிங்.



சாந்தியின் தகனம் முடிந்து சரியாக நாற்பத்தெட்டாவது மணி நேரத்தில் அந்தத் திடுக்கிட வைக்கும் செய்தி பல்வந்த் சிங்குக்கு எட்டியது. அவர் உடனே தனஞ்செயனைக் கூப்பிட்டு அனுப்பினார்.

'' நாம் நாக்ஸலைட்டுகள் போல் நடிக்கப் போக, நிஜ நாக்ஸலைட்டுகளே நம் கண்ணில் விரலை விட்டு ஆட்டிவிடுவார்கள் போலிருக்கிறது'' என்றார்.

''அவர்களுடைய விரல்கள் நம் கண்ணைக் குத்தும் வரை நம் கைகள் பூப்பறித்துக் கொண்டிருக்குமா ?'' என்று கேட்டான் தனஞ்செயன். ''என்ன விஷயம் ?'' என்று வினவினான்.

''உன் மனத்துக்கு உகந்த காரியம் தான். பெரியதொரு சதித் திட்டத்தை முறியடிக்க வேண்டிய நிலையில் இருக்கிறோம்.''

''வேறு யாரையாவது அனுப்புங்கள், ப்ளீஸ்!'' என்றான் தனஞ்செயன். ''இப்போது என் மனம் ஒரு நிலையில் இல்லை. நான் தோல்வி கண்டால் உங்கள்பாடு தர்மசங்கடமாகிவிடும்.''

''யோசித்துச் சொல், அப்பனே!'' என்று புன்னகை புரிந்தார் பல்வந்த் சிங். ''இந்தச் சதிகாரக் கூட்டத்துக்கு அந்த நீக்ரோ ரிச்சர்ட் வில்லியம்ஸ் தான் தலைவன் !''

''என்னது?'' என்று மெய்யாலுமே துள்ளிக் குதித்தான் தனஞ்செயன். ஒரே பாய்ச்சலில் அவரை நெருங்கி அவர் தோள்களை இறுகப் பற்றி உலுக்கியபடி, ''சீக்கிரம் சொல்லுங்கள்.... என்ன.... எப்படி .... எங்கே.... எப்போது?'' என்று பல கேள்விகளை ஒரே சமயத்தில் கேட்க முயன்று குளறினான்.

''அடாடா! மேலே விழுந்து பிடுங்காமல் நான் கொடுக்கிற தகவல்களை அமைதியாகப் பெற்றுக் கொள்'' என்று சொல்லி அவனை ஒரு நாற்காலியில் அமர வைத்துப் பேசினார் பல்வந்த் சிங்.

டி. எம். ஐ.யின் கல்கத்தா பிரிவு அந்தச் செய்தியை அனுப்பியுள்ளது. தில்லியிலிருந்து புறப்பட்ட ரிச்சர்ட் வில்லியம்ஸ் நேராகக் கல்கத்தா சென்று அங்குள்ள பயங்கரவாதிகளான சில நாக்ஸலைட்டுகளைச் சந்தித்திருக்கிறான். இவர்கள் மீது எப்போதுமே உள்துறைஅமைச்



சகத்தின் ஸி. ஐ. பி. (ஸென்ட்ரல் இன்டலிஜென்ஸ் பீரோ) ஒரு கண் வைத்திருந்ததால் அவன் வந்ததும் பேசியதும் உடனடியாகத் தெரிந்து போயிற்று. டி. எம். ஐ.யுடன் தாமதமின்றித் தொடர்பு கொண்டு சொல்லியிருக்கிறார்கள்.

ரிச்சர்ட் வில்லியம்ஸ் யாருக்காகவும் காத்திராமல், யாரையும் எதிர்பாராமல் விசாரிக்காமல், டாக்ஸி ஏறி, நேரே குறிப்பிட்ட விலாசத்துக்குப் போனதால் இந்த நாக்ஸலைட்டுகள் பற்றி அமெரிக்காவிலேயே அவனுக்கு விவரங்கள் தரப்பட்டிருக்க வேண்டும் என்று ஊகிக்கலாம். ஏதோ ஒரு பயங்கர சதித் திட்டத்தில் ஈடுபடுமாறு அவனைப் பாரதத்தின் விரோதிகள் ஏவியுள்ளார்கள் என்று புரிகிறது. அமெரிக்காவில் உள்ள சீன அல்லது பாகிஸ்தானிய ஐந்தாம் படையினர் அவனை இங்கு கையூட்டுக் கொடுத்து அனுப்பியிருக்கிறார்கள். அவனைப் பொறுத்தவரை பழி வாங்கியதாயுமாயிற்று, சதிச் செயலில் ஈடுபட்டுப் பணம் பண்ணியதாகவும் ஆயிற்று. காசுக்காகத் துப்பாக்கி ஏந்துவதுதானே அவன் தொழில்!

பல்வந்த்சிங் ஒரு 12×10 புகைப்படத்தை மேஜை டிராயரிலிருந்து எடுத்துத் தனஞ்செயன் பக்கம் நீட்டினார். ''ஸி.ஐ.பி. ஏஜெண்ட் டெலிலென்ஸ் போட்டு எடுத்தது. கானன் காமிரா. ரொம்பத் தெளிவாக இருக்கிறது, இல்லையா?''

''இவன்தான், இவனேதான்!'' என்று துடித்து எழுந்தான் தனஞ்செயன்.

''வெறுப்பை உமிழும் கண்கள் என்றுதான் அப்போதே சொல்லிவிட்டாயே!'' என்று கூறிப் புகைப்படத்தைத் திரும்ப வாங்கிப் பத்திரப்படுத்தினார் பல்வந்த்சிங்.

''ஏதோ சதிச் செயல் என்றீர்களே, அது பற்றிய விவரம் ஏதாவது தெரிய வந்ததா?''

''ஓயெஸ்!'' என்றபோது பல்வந்த்சிங் குரலில் இலேசாகப் பெருமிதம் எட்டிப் பார்த்தது. ''பொறுக்கி எடுக்கப்பட்ட பத்தொன்பது நாக்ஸலைட்டுகளுடன் அவன் சென்னைக்கு ரயிலேறியுள்ளான். அவனைத் தொடர்ந்து நமது டி.எம்.ஐ. ஆட்கள் அவன் அறியாதவாறு செல்கிறார்கள்.

''மொத்தமுள்ள இருபது பேர்களில் பதினைந்து நபர்கள் மீனவர்கள். அலைகடலின் ஆர்ப்பாட்டங்கள் அனைத்தும் அவர்களுக்கு அத்துப்படி. பாக்கியுள்ள ஐந்து பேரும் ரிச்சர்ட் உள்பட டைம்—பாம் தயாரிப்பதில் நிபுணர்கள். ஹௌரா மெட்ராஸ் ரயிலில் அவர்கள் இப்போது ஏறியுள்ள போதிலும் அவர்கள் வாங்கியுள்ள டிக்கெட்டுகள் திருவனந்தபுரத்துக்கு.''

''தும்பா!'' என்றான் தனஞ்செயன். ''தும்பா ராக்கெட் தளம் கடற்கரை ஓரமாக உள்ளது. அறுநூறு ஏக்கர் நிலப் பரப்பில் கடற்கரையோர எல்லை ஐந்நூறு கிலோமீட்டர் நீளத்துக்கு இருக்கும். சாலையோடு வரும் நபர்களை, வாகனங்களைக் கேட் அருகே நிறுத்திச் சோதனைகளுக்கு உள்ளாக்கலாம். அனுமதிச் சீட்டு இருக்கிறதா என்று பார்க்கலாம். ஆனால் பல கிலோமீட்டர் நீளமுள்ள கடற்கரைப் பகுதியை எப்படி எவ்வளவு பேர் காவல் காப்பது?''

''கரெக்ட். திருவனந்தபுரத்திலிருந்து ஐந்து தனித் தனிக் குழுக்களாக அவர்கள் இயங்குவார்கள். நாட்டுப்படகு அல்லது கட்டுமரத்தில்கூட ஏறிப் போவார்கள். வாட்டர் ப்ரூப் பைகள் அவர்களுடைய வெடி உபகரணங்களை நனையாமல் பாதுகாக்கும். தும்பா தளத்தின் கடற்கரைப் பகுதியில் கரை சேர்வார்கள். எல்லாரும் முன்கூட்டியே நிர்ணயிக்கப்பட்ட நேரத்தில் கைக்கடிகாரப்படி நிமிஷம் பிசகாமல் செயல்படுவார்கள்.''

''ஒவ்வொரு குழுவும் தும்பா ராக்கெட் தளத்தின் ஒவ்வொரு பகுதி நோக்கிப் பிரிந்து இருட்டில் பதுங்கிச் செல்லும். டெலிமெட்ரி ஸ்டேஷன், ரேடார் ஸ்டேஷன், கண்ட்ரோல் ரூம், எரிபொருள் தயாரிப்பு நிலையம், ராக்கெட் தயாரிப்புத் தொழிலகம் என்று ஐந்து முக்கிய இடங்களுக்குப் போய்ப் பல டைம் பாம்களை ஒவ்வோரிடத்திலும் வைத்துவிட்டுத் திரும்பும். ஒவ்வொரு குழுவிலும் ஒரு டைம் பாம் நிபுணன் இருப்பான். மற்ற மூவர் துணைக்கும் இட்ட பணியைச் செய்யவும்.''

''அனைவரும் கடற்கரையில் பிரிந்த இடத்தில் மீண்டும் கூடு முன்னரே தும்பா ராக்கெட் தளம் உருத் தெரியாமல் அழிந்து போகும். கைகுலுக்கி ஒருவருக்கொருவர் வாழ்த்துத் தெரிவித்துவிட்டு நாலு திசைகளிலும் பரவலாய்ப் பறந்தோடிச் சென்று மறைவார்கள். நமது இந்த ஊகங்கள் நூற்றுக்கு நூறு சரி என்பதற்கும் அத்தாட்சி கிடைத்துள்ளது'' என்றார் பல்வந்த்சிங்.

''என்ன அது?''

''ரிச்சர்ட் சந்தித்துப் பேசிய நாக்ஸலைட் கூட்டத்தினரில் சிலர் மட்டுமே அவனுடன் தெற்கு நோக்கிப் பயணப்பட்டிருக்கிறார்கள். பின்தங்கி விட்ட மற்றவர்களுள் ஒருவனைப் பிடித்துக் கல்கத்தாவிலேயே விசாரிக்கிறபடி விசாரித்ததில் உண்மைகள் தெரிய வந்துள்ளன. அவற்றை எழுதிக் கையெழுத்து வாங்கிக் கொண்டு அவனை அனுப்பிவிடச் சொன்னேன். அப்போதுதான் அவன் சகாக்களுக்குச் சந்தேகம் ஏற்படாதிருக்கும். இவனும் நம்மிடம் அகப்பட்டுக் கொண்ட விஷயத்தை உயிருக்கு அஞ்சி வெளியிடமாட்டான். உண்மைகளை நம்மிடம் கக்கியிருக்கிறான் என்ற சந்தேகம் அவனது நாக்ஸலைட் சகாக்களுக்கு எழுந்தால் பிறகு வாழவிடுவார்களா அவனை?''

''நான் எப்போது புறப்படட்டும்?'' என்று கேட்டான் தனஞ்செயன்.

''எந்த வினாடியும் நல்ல நேரம்தான். ராணுவ விமானம் ஒன்று காத்திருக்கிறது'' என்றார் பல்வந்த் சிங். ''ஆனால் ஒன்று: இதைக் கவனமாகக் கேள்! சாந்தி விபத்தில் மாண்டு போனான் என்பதாக நாம் கதை கட்டிவிட்டபிறகு அந்த நீக்ரோவை நாம் சட்டபூர்வமாகத் தண்டிக்க முடியாது. எனவே, நீ பழி வாங்கத் துடிப்பதை அனுமதிக்கலாம் என எண்ணினேன். இப்போதோ பழி வாங்கும் படலம் இரண்டாம்பட்சமாகிவிட்டது. நாட்டைக் காக்கும் பணி முதலிடம் பெறுகிறது. தும்பா ராக்கெட் தளத்தைக் காப்பது தான் முக்கியமேயொழிய நீ ஒரு ஹீரோவாக விளங்குவது அல்ல! இதை மறக்கவே மறக்காதே! பெஸ்ட் ஆஃப் லக்!''

## 54. இதயத்தின் ஒரு கொடிய பகுதி

ஜிலுஜிலுவென்ற கடற்காற்று பித்தான் அவிழ்த்துவிடப்பட்ட சட்டையினுள் நுழைந்து பனியன் அணியாத உடலில் உரோமங்களுடன் விளையாடிச் சிலிர்ப்பை ஏற்படுத்தியது. அலைகள் பொங்கி விழுந்தபோது துயருற்ற கடல் கன்னிகைகளின் ஹோவென்ற அழு குரலாக ஓசை எழுந்தது. தென்னை மரங்கள் இருட்டில் கரிய நிழலுருவங்களாக விகாரமாய்க் காட்சி தந்தன. அவற்றின் மட்டைகள் சலசலத்து மர்ம ஒலி உண்டாக்கின. பாதங்களுக்குக் கீழ் கடற்கரை மணல் நெகிழ்ந்து கொடுத்து ஒரு நிலையற்ற தன்மையை உணர்த்தின. தனஞ்செயன் உள்ளத்தில் இந்தச் சூழல் இனம் புரியாத ஒரு சோர்வை உண்டாக்கியது. ஆகாயத்தில் நாலாம் பிறை இரு தென்னை மரங்களினூடே தெரிந்தது. நாலாம் பிறையைப் பார்க்கக் கூடாது என்று அவன் சிறுவனாயிருந்தபோது தாயார் கூறக் கேட்டிருந்தான். அது இப்போது நினைவுக்கு வந்தது.

கூடவே 'ஒரு ஹீரோவாக இருக்க முயலாதே' என்ற பல்வந்த் சிங்கின் அறிவுரையும் ஞாபகம் வந்தது. வயிற்றை லபக்கென்று ஓர் அசுரக் கரம் பற்றிப் பிசைவதுபோல் இருந்தது. கையிலிருந்த சிறிய, 'ப்ரௌனிங் ஒன்பது எம். எம். அடோமாடிக்' துப்பாக்கியின் மீது பிடி இறுகியது.

ஒரு ஹீரோவாக அவன் விளங்க முயலக் கூடாதென்றால் திருவனந்தபுரத்திலேயே அவர்களை வளைத்துப் பிடித்திருக்க வேண்டும். அவர்களைப் பின்தொடர்ந்து வந்திருந்த டி.எம்.ஐ. ஆட்கள் பத்மநாப சுவாமி கோயிலையொட்டி பஸ் ஸ்டாண்ட் அருகே அவர்கள் தங்கியிருந்த ஹோட்டலின் பெயர், அறை எண்கள் முதலியவற்றைக் கச்சிதமாகச் சொன்னார்கள். ஆனால் தனஞ்செயன் பிடிவாதமாக அங்கு போக மறுத்துவிட்டான். அவர்களிடம் வெடி மருந்துகள், டைம்பாம்கள் முதல்யன இருந்தன என்பதே அவர்களைத் தண்டிக்கப் போதிய அத்

அவள் மென்மையானவள்... அவள் ஒரு புதிர்...
அவள் மிருதுவானவள், உறுதியானவள்...
தீப்போன்றவள்... அவள் பெண்மையே உருவானவள்...

பட்டுப் போன்ற டால்க்... அன்பைப்போல
மிருதுவானது. உங்கள் மேனியைத் தழுவி
அரவணைப்பது. உங்களை மோகன வாகினியில்
ஆழ்த்தும் அருமையான புது நறுமணம்
கொண்டது. அதுவே வெய்ல் ஆ:ப் லவ்.
ஹேலோ மட்டுமே அளிப்பது. அதைத்
தாராளமாக மேனியெங்கும் தூவிக்
கொள்ளுங்கள். ஹேலோவிற்கெனவே
பிரத்யேகமாக உருவான அதன் நறுமணம்
நீண்ட நேரம் உங்களைத் தழுவி
உங்களைச் சுற்றிலும் கமகமவென
வீசிக் கொண்டிருக்கும். வெய்ல்
ஆ:ப் லவ் உங்களை அலங்கரிக்-
கட்டும். ஹேலோ மட்டுமே
அளிக்கும் வாசமுள்ள
அன்புத்திரை அது.

ஹேலோ வெய்ல் ஆ:ப்
லவ் டால்க் வாசமுள்ள
அன்புத்திரை...
அன்பைப் போல
மிருதுவானது.

அவளுக்கு உகந்தது

# ஹேலோ

வெய்ல் ஆ:ப் லவ்
டால்க




HT.G.I.TH (R)

அடுத்த இதழில்:

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி முடிவு**
**ரூ 1000/- முதல் பரிசுக் கதை**



தாட்சிகள்தாம். ஆனால் கடுமையான தண்டனையாகக் கிடைக்காது. தும்பாவைத் தகர்க்கச் சதி செய்ததாக நிரூபிக்க முடியாது போகும். அப்ரூவராக மாறி வற்புறுத்தலின் பேரில் கையெழுத்துப் போட்டுத் தந்த நாக்ஸலைட்டின் வாக்குமூலம் வலுவான சாட்சியமாகாது. ஒரு வருஷம் அல்லது இரண்டு வருஷங்கள் கம்பி எண்ணிவிட்டு வெளியே வந்துவிடுவார்கள்.

ஆனால் டைம்பாம்கள் துப்பாக்கிகள் சகிதம் அவர்களை இரவு நேரத்தில் தும்பா ராக்கெட் தளத்துக்குள் கள்ளத்தனமாக நுழையும் போதே பிடித்தால் அனைவருக்கும் ஆயுள் தண்டனை கூடப் பெற்றுத் தரலாம். எதிர்ப்புத் தெரிவிக்கவோ தப்பி ஓடவோ முற்பட்டால் ரொம்ப நல்லதாயிற்று. அவர்களைச் சுட்டுத் தள்ள வலுவான காரணம் அகப்பட்டதாகும்!

'ஹீரோவாக இருக்க முயலாதே' என்று பல்வந்த் சிங் கூறியது அவன் செவிகளில் மீண்டும் ஒலித்தது. "கோ டு ஹெல்!" என்று அவன் முணுமுணுத்தான். "அவர்கள் இங்கேயே வரட்டும்! காத்திருக்கிறேன்!"

'ஆயின் அவர்கள் இங்கேயே, தும்பா தளத்துக்கே வந்த பிறகு நான் ஏமாந்து போக நேரிட்டு ரிச்சர்ட் வில்லியம்ஸ் வெற்றிபெற்றுவிட்டால்...? ராக்கெட் தளத்துக்குச் சேதம் விளைந்தால் எனக்கு மன்னிப்பே கிடையாது என்பது ஒருபுறமிருக்க எவ்வளவு பெரிய ஆபத்தில் நாட்டைச் சிக்க வைத்திருக்கிறேன் நான்!'

இவ்வாறு எண்ணியபோது தனஞ்செயனின் இருதயம் படபடவென்று அடித்துக் கொண்டது. முட்டாள்தனமான காரியமோ இது? இருந்தாலும் மனத்தை மாற்றிக் கொள்ள இது தருணமல்ல. அதற்குக் காலதாமதமாகி விட்டது. இப்போது அவர்கள் வரக் காத்திருப்பதும் பிறகு போராடுவதும் தான் மார்க்கம்.

தும்பாவைக் காவல் காக்க என்று அமர்த்தப்பட்டவர்கள் தங்களுடைய வழக்கமான இடங்களில் நின்றார்கள். ஆனால் அவர்களைத் தனஞ்செயன் எச்சரித்து வைத்திருந்தான். ஒரு தாக்குதல் நடக்கப் போகிறது என்று சந்தேகிக்காதவர்கள் போலவே இயல்பாக நடந்துகொள்ள வேண்டும் என்று கூறியிருந்தான். தும்பாவில் பணியாற்றும் நூற்றுக்கணக்கான விஞ்ஞானிகளுக்கும் ஆயிரத்துக்கும் மேற்பட்ட தொழிலாளர்களுக்கும் ஒரு விவரமும் தெரியாது. உயர் மட்டத்தில் நிர்வாகப் பொறுப்பில் இருக்கும் ஓரிருவரைத் தவிர. தன்னிடமுள்ள அடையாளச் சீட்டுக்கள் தகுதிச் சான்றிதழ்கள் ஆகியவற்றைக் காட்டி இரவு அங்கு தங்கியிருக்கத் தனஞ்செயன் அனுமதி பெற்றிருந்தான். தும்பாவைத் தகர்க்கச் சதி நடப்பதாக அவன் கூறியதை நம்புவது அவர்களுக்குக் கடினமாயிருந்தது என்றாலும் அவன் கடமையை ஆற்ற அனுமதித்துவிட்டு அவர்கள் அன்றைய அலுவல்கள் முடிந்ததும் வீடு திரும்பிவிட்டார்கள். தும்பாவில் பணியாற்றும் யாருக்குமே அங்கு இல்லங்கள் கிடையாது. எல்லோரும் திருவனந்தபுரமோ அல்லது அருகில் உள்ள வேறு ஏதாவது சிற்றூருக்கோ போக வேண்டியதுதான். ராக்கெட் நிலையத்தின் ஊழியர்களுக்கெனப் பிரத்தியேக பஸ் வசதி உண்டு.

சதிக் கூட்டத்தினருக்கும் இது வசதிதான். தும்பாவில் காவல்காரர்கள் எங்கெங்கு இருப்பார்கள், எந்தெந்தப் பக்கங்களில் நடமாடுவார்கள் என்பதையெல்லாம் வரைபடங்களை வைத்துக் கொண்டும் ஒற்றர்கள் மூலம் கிடைத்த தகவல்களைக் கொண்டும் நாக்ஸலைட் குழு ஆராய்ந்திருக்கும். ராக்கெட் தளத்தின் பல முக்கிய தொழிலகங்களும் ஆராய்ச்சி நிலையங்களும் எந்தெந்த இடத்தில் தும்பாவில் உள்ளன என்பதும் வரைபடத்தில் குறிக்கப்பட்டிருக்குமாதலால் கடற்கரையிலிருந்து ஒவ்வொரு குழுவும் எந்த மார்க்கமாய்ப் பதுங்கிப் போய் அந்த இலக்குகளை அடைய வேண்டும் என்பதையும் திட்டமிட்டிருப்பார்கள். அவர்கள் எதிர்பாராத விஷயம் சதியாலோசனை அம்பலமாகித் தனஞ்செயனும் அவனுடைய சகாக்களான இருபத்தைந்து பேர்களும் தங்கள் வருகைக்காகக் காத்திருக்கிறார்கள் என்பதுதான். தனஞ்

செயனின் விசில் சத்தம் கேட்டதும் அவரவர்களும் மறைவிடத்திலிருந்து பாய்ந்து வந்து சதிகாரர்களைச் சுற்றி வளைக்கவோ தேவையாயின் சுட்டுத் தள்ளவோ தயாராயிருந்தார்கள். இவர்களுடன் தும்பாவின் வழக்கமான காவலர்களும் சேர்ந்துகொள்ளத் துடியாயிருந்தார்கள். அனைவரது செவிகளும் தீட்டப்பட்டு விசில் சப்தத்தை எதிர்நோக்கியிருந்தன.

அந்தச் சத்தம் எழுந்தபோது இரவு மணி ஒன்று! ஒரு கரிய நிழல் அதைத் தொடர்ந்து மற்றொன்று என்று கடல் பரப்பில் படகுகளும் கட்டுமரங்களும் தென்பட்டபோது தனஞ்செயன் அவசரப்படவில்லை. குழுக் குழுவாக அவர்கள் கரை சேர்ந்து படகை அல்லது கட்டுமரத்தை மணல்பரப்பில் இழுத்துவிடும் வரையில் அவன் காத்திருந்தான். டைம்பாம்கள் அடங்கிய நீர் புக முடியாத பைகளுடன் அவர்கள் நடந்து முன்னேறத் தொடங்கிய போது விசிலைப் பலமாக ஊதினான்.

எதிர்பாராத எதிர்ப்பு நாக்ஸலைட்டுகளை வெலவெலக்கச் செய்துவிட்டது. இருட்டில் கரிய தென்னை மரங்களினூடே நோக்குகையில் டி.எம்.ஐ. ஆட்களும் காவலர்களுமான முப்பது முப்பத்தைந்து பேர் முந்நூற்றைம்பது பேர்களாகத் தெரிந்தார்கள்.

''ஹாண்ட்ஸ் அப்'' என்ற உத்தரவு பயங்கரத் தொனியில் தனஞ்செயனின் கண்டத்திலிருந்து கிளம்பிய அதே கணத்தில் அன்று மாலைதான் முழுமையாக 'சார்ஜ்' ஏற்றப்பட்டிருந்த ஐந்தாறு பாட்டரி விளக்குகள் பிரகாசமாக ஒளி சிந்தின. அத்தனை பேரும் திகிலும் திகைப்புமாக மூட்டை, களைப் பொத் பொத்தென்று போட்டுவிட்டுக் கரங்களை உயர்த்திவிட்டார்கள்.

நீக்ரோ ஒருவனைத் தவிர.

வெறுப்பை உமிழும் விழிகள் இங்குமங்குமாகப் பரபரத்துப் பாய்வதைத் தனஞ்செயன் கண்டான். அடுத்த விநாடியில் ஒரு தென்னை மரத்துக்குப் பின்னால் பதுங்கிக் கைத் துப்பாக்கியை ரிச்சர்ட் இயக்கினான். தனஞ்செயனின் பாதத்திலிருந்து ஓர் அங்குல தூரத்தில் அது மணலில் புதைந்தது.

துப்பாக்கியின் நெருப்பொளி தென்பட்ட இடத்தைக் குறி வைத்துச் சுட்டான் தனஞ்செயன். இருள் கன்னிக்கு மை தீட்டியதுபோல் கும்மிருட்டினூடே கரிய நிழலாக நீக்ரோ ஓடுவது தெரிந்தது. தனஞ்செயன் பாய்ந்தான். தென்னை மரங்களினூடே பின்னிப் பின்னிப் பாதை சமைத்து ஓடினான் ரிச்சர்ட், தனஞ்செயனின் துப்பாக்கித் தோட்டாவிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ள. அவ்வப்போது திரும்பித் தனஞ்செயனை நோக்கிச் சுடவும் செய்தான்.

'' சாகமாட்டேண்டா !'' என்று கறுவினான் தனஞ்செயன். ''உன்னை அழித்து ஒழிப்பதற்கு முன்னால் எனக்கு ஏது சாவு ?''

அதோ பிளாக் ஹவுஸ். வலப்புறத்தில் லாஞ்ச் பேட் — ராக்கெட் புறப்படும் தளம். வெட்டவெளி! இங்கே அவன் தப்ப முடியாது! கயவனைப் பழி வாங்கும் படலத்தைப் பார்க்க யாரும் அருகில் இல்லாததும் சௌகரியம் தான். காவலர்களும், டி. எம். ஐ. சகாக்களும் தனது உத்தரவுப்படி நாக்ஸலைட்டுகளுக்கு விலங்கு மாட்டுவதிலேயே கருத்தாயிருக்கிறார்கள்.

'டுமீல்' என்று துப்பாக்கி வெடிக்கும் ஓசையும் 'ஹா'வென்று ரிச்சர்ட் அரக்கக் குரலில் அலறுவதும் ஒன்றையடுத்து ஒன்று இடைவெளியின்றிக் கேட்டது. 'லாஞ்ச் பேட்'டின் மத்தியில் அவன் சுருண்டு விழுந்தான். கால்களை இழுத்துக் கொண்டு அவன் பின்னோக்கி நெளிந்து அமர்ந்தபடியே நகர்வதைப் பார்த்தால் காலில் பலத்த அடிபட்டிருப்பது புரிந்தது. அவன் கரத்தில் இன்னமும் துப்பாக்கி யிருந்தது. அவனை நெருங்கி முன்னேறி வரும் தனஞ்செயனின் உருவத்தை அது குறி பார்க்கவும் செய்தது! ''கொன்றுவிடு! என்னைக் கொன்றுவிடு '' என்று முணு முணுத்தபடியே அவனை நெருங்கினான் தனஞ்செயன். ''அதை நான் விரும்புகிறேன், வரவேற்கிறேன். உன்னைக் கொன்ற திருப்தியோடு நானும் சாகிறேன்!''

ஆனால் தனஞ்செயனுக்கு அவ்வளவு சுலபமான தண்டனையை ஆண்டவன் தான் அளிக்க விரும்பவில்லையோ, அல்

அடுத்த இதழில்:



**செய்தியில் விளைந்த சிறு கதைகள்**

ரா. வீழிநாதன்

லது ஏராளமாய் ரத்தம் இழந்ததால் ரிச்சர்ட்டின் உடல்தான் வலுவிழந்து போனதோ, அல்லது கோழையாக மாறி உயிர்ப் பிச்சை கேட்கத்தான் நினைத்தானோ, எவ்வாறாயினும் அவன் கரம் தாழ்ந்துவிட்டது!

தனஞ்செயன் அவனை அணுகி, அவன் துப்பாக்கியை உதைத்து அப்பால் தள்ளினான். பிறகு அவன் தொடைகளுக்கு இடையில் தன் பூட்ஸ் கால்களால் பலமாக ஓர் உதை விட்டான். ரிச்சர்ட் தரையில் எடுத்து விடப்பட்ட மீனைப் போல் வேதனை தாங்காது ஒரு துள்ளுத் துள்ளி விழுந்தான். வீரிட்டு அலறிய அவனைக் கதறக் கதற எழுப்பி நிற்க வைத்துத் துப்பாக்கியின் அடிவாரத்தால் நெற்றிப் பொட்டில் அடித்தான் தனஞ்செயன். மீண்டும் கீழே விழுந்தவனை நெஞ்சிலும் முகத்திலும் மாறி மாறி உதைத்தான்.

இனி தன் சித்திரவதைகளை உணரும் சக்தி அவனுக்கு இல்லை, அவன் நினைவிழந்து விட்டான் என்பதை உணர்ந்ததும் தனஞ்செயனின் துப்பாக்கி ரிச்சர்ட்டின் இதயத்தைக் குறி பார்த்தது.

துப்பாக்கி வெடித்த மறுகணம் தனஞ்செயனுக்கு அனுபமா பாரிஸில் வைத்துத் தன்னிடம் கூறிய ஒரு வாக்கியம் நினைவு வந்தது: ''உங்கள் உள்ளத்தின் ஒரு கொடூரமான பகுதியை நான் உணர்கிறேன்!''

## முடிவுரை

**1978**ம் ஆண்டின் மையத்தில் ஒரு நாள். சென்னையிலிருந்து சுமார் எழுபது மைல் தூரத்தில் ஸ்ரீஹரிகோட்டா தீவிலிருந்து இந்தியாவிலேயே தயாரான ராக்கெட், இந்தியாவிலேயே தயாரான செயற்கைச் சந்திரனை ஏந்தி உயரே விண்வெளிக்கு எழும்பிச் செல்லத் தயாராக உள்ளது. நாற்பது கிலோகிராம் எடையுள்ள செயற்கைச் சந்திரனை நானூறு கிலோமீட்டர் உயரத்தில் உலகைச் சுற்றி வரச் செய்யும் இந்த எஸ். எல். வி—3 ராக்கெட். இத்துறையில் இந்தியாவின் கன்னி முயற்சியான இது, வெற்றி பெறலாம்; அல்லது வெற்றி பெறாமலும் போகலாம். ஆனால் இதையடுத்து இதைவிடச் சக்திவாய்ந்த பலராக்கெட்கள் புறப்படப்போவதும் இதைவிடக்கனமான செயற்கைச் சந்திரன்களை இதைவிட உயரத்தில் விண்வெளியில் உலகைச் சுற்றி வருமாறு விடுவிக்கப் போவதும் சர்வ நிச்சயம்.

ஆனால் இந்த வெற்றிகளுக்குப் பேருபகாரம் செய்த தனஞ்செயன், மைக்கேல், அனுபமா போன்றவர்களது சோகக் கதைகள் கதைகளாகத்தான் உலவுமே தவிர வெளி உலகுக்கு உண்மையெனத் தெரிய வராது.

'எல்லோரது வாழ்க்கையும் சோகமயமானதுதவிர, நான் வீட்டுக்காகவோ அல்லது நாட்டுக்காகவோ அல்லது உலகுக்காகவோ சாதித்தது என்ன?' என்று தனஞ்செயன் யோசித்தான். சாந்தி, அனுபமா, மைக்கேல், தனஞ்செயன், பால் ஸ்மித் ஜிம் கார்ட்டர், ரிச்சர்ட் வில்லியம்ஸ், பல்வந்த் சிங், இன்னும் எஃப். பி. ஐ., டி.எம்.ஐ. ஸி.ஐ.பி. ஆசாமிகள் எல்லாருமாக ஒருவரையொருவர் வெறுத்தும், சந்தேகித்தும், ஏய்த்தும், துன்புறுத்தியும் கண்டது என்ன? வன்மம் தீர்த்துக் கொண்டும் போர் தொடுத்தும் சாதித்தது என்ன?

மேலும் மேலும் வெறுப்பும், சந்தேகங்களும், ஏமாற்று வித்தைகளும், துன்புறுத்தல்களும், பழி வாங்கும் படலங்களும், போர் தொடுத்தலும் பெருகுவதற்கு வழி வகுத்ததுதான் அவர்களுடைய சாதனை! இதற்கு முடிவு ஏது?

ஆயிற்று: கவுண்ட் டவுன் இதோ ஆரம்பமாகப் போகிறது. பத்து நிமிஷம், ஒன்பது நிமிஷம், எட்டு, ஏழு என்று ராக்கெட் புறப்படப் போகிற நேரத்தை நோக்கி எண்ணிக்கையைக் குறைத்துக் கொண்டே வருவார்கள். கடைசி வினாடியில் 'ஸீரோ' என்னும் போது ராக்கெட் மேலே கிளம்பும். 'ஸீரோ' என்ற சொல்லைத் தனக்குள் கூறிப் பார்த்துக் கொண்டான் தனஞ்செயன். கணித சாஸ்திரப்படி பார்த்தால் அந்த பூஜ்யத்துக்குக்கூட மதிப்பு உண்டு. ஆனால் தன் மனத்தில் நிலவுவது அந்தப் பூஜ்யம்கூட இல்லை! வெறுமைகூட இல்லை! ஒன்றுமே இல்லை! சூன்யம்! விண்வெளியில் எல்லையற்ற பெரும் பரப்பாகக் கிடக்கும் சூன்யம் தன் உள்ளத்திலும் நிலவுவதை அவன் உணர்ந்தான்.

ஒலிபெருக்கி அலறியது. கடைசி பத்து வினாடிகளை, வினாடிகள் கணக்கிலே குறைத்துக்கொண்டு வந்தது. டென், நைன், எய்ட், ஸெவன், ஸிக்ஸ்!...



'நான்
மனதைப்
பறிகொடுத்
தேன்'
என்கிறார்
பர்வீன் பாபி

100% பாலியெஸ்டர் புடவைகள்

# பாம்பே டையிங்

பற்பல வகைகளில் 100%பாலியெஸ்டர் மற்றும் 100%ப்யூர் காட்டன் புடவைகள்—'ஆஷியானா', 'ஷிஃபாலா' மற்றும் 'ரேலிகா'. பர்வீன் பாபியைப் போன்றே கவர்ச்சி நிறைந்த டிசைன்கள்.



BD-7205

# அழகுள்ள இடத்தில்...

எஸ். லட்சுமி சுப்பிரமணியம்

வளையல்கள் குலுங்கும் கைகளை வீசிக் கொண்டு, டிபன் பையும், குடையுமாக அலுவலகப் படிகளில் ஏறி வந்தாள் சித்ரா. பின்னல் பின்னல் தடியாய்க் கூத்தாடிச் சாட்டை போலச் சுழன்றது. ஏறி வந்த சிரமத்தில் மூச்சு வாங்கிற்று.

நல்ல உயரமும் அதற்கும் சற்று மிஞ்சிய தாகவே உடற்பருமனுமாக இருந்ததனுலோ என்னவோ, பஸ்ஸிலும் தெருவிலும் அலுவல கத்திலும், அவள் நடந்து வருவதைச் சற்றுக் கவனித்து விட்டுத் திரும்பாதவர் இடை டாது. அவளுக்குச் சுத்தமாக 'டைப்' செய்ய வரும். துளி நழுவாமல் கருக்கெழுத்து எடுக்க முடியும். அலுவலகக் குறிப்பு எழுதும் விதம் வெகு கச்சிதம். ஆனாலும் என்ன? ஒரு தடவை சிரித்தாலும், பெருமூச்சு விட்டாலும், அவளைக் கவனிப்பவர்களுக்கு அவளிடம் அனுதாபம்தான் மிஞ்சும்.

தகதகவென்று நிறம், இளமை, வரிசைப் பல் இவையெல்லாம் இருந்து என்ன? மெல்லிய உடலும் அழகிய இடையும் இள இளவென்ற மென்மை ததும்பும் பாதமுமாக இல்லாததால், அவள் நடக்கும் போதோ வயதுக்கு மீறிய ஒரு தோற்றம் தான் கண்ணில் தெரிந்தது. அவளுக்குத்தான் தெரியும், ஓர் இளம் பெண்ணின் ஒயிலான வடிவத்துக்காக அவள் எவ்வளவு ஏங்கிறுள் என்று.

அது ஒரு விளம்பரப் பணியைக் கவனிக்கும் அலுவலகம். அழகான 'மாடல்'கள் எத் தனேயோ பேர் அங்கே வந்து போவார்கள். மணம் செய்து கொண்ட பிறகும் உடற்கட்டும் உறுதியும் தளராத, வயதான பிறகும் இளமை மெருகு அழியாத பெண்களை அங்கே அவள் சந்திப்பதுண்டு. அவர்களைக் கவனிக் கும் போது அவள் மனம் பொட்டலம் அவிழ்ந்தது போலச் சிறிது நேரம் நிலை குலைந்து நிற்கும்.

''மானேஜர் ஸார் கூப்பிடுகிறார்'' என்று சொன்னான் பையன். கைக்குட்டையை



யெடுத்து நெற்றியை ஒற்றிக் கொண்டு எழுந்தாள் சித்ரா. வெய்யிலில் நடந்து வந்த சிரமத்தில் தோள், முதுகு எல்லாம் வியர்வையால் நனைந்திருந்தன.

உள்ளே வந்து நின்றவளை ஒரு கணம் அனுதாபத்தோடு கவனித்து விட்டு மானேஜர் சொன்னார். ''மிஸ். சித்ரா! உங்களுக்கு ஒரு முக்கியமான வேலை. இந்த வாரக்கடைசியில், பம்பாயிலிருந்து ஒரு முக்கியமான மனிதரை நம்முடைய தலைமை அலுவலகம் அனுப்பி வைக்கிறது. இங்கேயே ஓர் அறையில் அவர் வேலையைக் கவனிக்கப் போகிறார். அவருக்கு உதவியாக நீங்கள் இருக்க வேண்டும்.''

''ஆகட்டும் ஸார்!''

''அவரும் உங்களுக்கு உதவியாக இருக்கக் கூடும். அவர் ஒரு 'ஸ்பெஷலிஸ்ட்'. உடை, அழகு செய்து கொள்வது, இவைகளில் ஆலோசனை சொல்லும் நிபுணர். சில திரைப்பட நட்சத்திரங்களுக்கும் கூட, அவர் ஸ்பெஷலாக யோசனை சொல்கிறார்.''

சித்ரா சற்று ஆவலோடு நிமிர்ந்து பார்த்தாள். அவள் நெஞ்சில் அவளையும் அறியாமல் ஒரு யோசனை இழை பாயத் தொடங்கியது.

அறைக் கதவைத் திறந்து கொண்டு கலகலவென்ற சிரிப்புடன் நாலைந்து பெண்களாக உள்ளே வந்தார்கள். ஒருவரோடு மற்றவர் போட்டி போடுவதைப் போல் எவ்வளவு அழகான, மென்மையான கவர்ச்சி நிறைந்த உருவம் அவர்களுக்கு? இரண்டொருவருக்குச் சற்றுப் பருமன் இருந்தாலும் அந்த வடிவம் எவ்வளவு நேர்த்தியாக இருந்தது? அவளுடைய புத்திசாலித்தனம், வேலைத்திறமை எல்லாவற்றையும் அவள் தூக்கிக் கொடுத்து விடுவாள் — இதைப் போல ஒரு தோற்றமும், பெண்மையின் கனிவும் அவளுக்குக் கிடைக்குமானால்.

அவனைப் பார்த்ததும், ''நீங்கள் தான் எனக்கு உதவியாக இருக்கப் போகும் சித்ராவா?'' என்று கேட்டான் விசுவம்.

''ஆமாம் உங்களைச் சந்திப்பதில் எனக்கு மிகவும் மகிழ்ச்சி. நீங்கள் ஒரு 'ப்யூட்டி ஸ்பெஷலிஸ்ட்' என்று மானேஜர் சொன்னார்!''

''ஸ்பெஷலிஸ்ட் மட்டுமில்லை. அழகு உள்ள இடத்தில் அதை உணர்ந்து பாராட்டவும் எனக்குத் தெரியும்'' என்றான் விசுவம். ஒரு கணம் சித்ராவின் முகம் சிந்தனையுடன் அவன் பார்வையைத் தேடிற்று. அந்தக் குரலில் இருந்த ஆர்வம் அவன் பார்வையில் இல்லை. ஏமாற்றத்தில் அவள் முகம் விழுந்தது.

வேலை ஆரம்பித்தது. நடுவில் தேநீர் வரவழைத்து அருந்திக் கொண்டே இருவரும் பேசினார்கள். அப்போது, இயற்கையாக ஒரு சந்தேகம் கேட்பது போன்ற, நிதானமான குரலில் கேட்டாள் சித்ரா.

''உங்கள் சாமர்த்தியத்தில் ஒரு பெண்ணின் கவர்ச்சியைக் கொண்டு வருவது—''

''தவறு. ஒரு பெண்ணுக்கு முக்கியமாகத் தேவைப்படுவது கவர்ச்சி அல்ல. மென்மையான அழகுதான். சற்றே மெருகு கொடுத்து அதை வெளியே ஒளிவிடச் செய்து விடலாம்.''

''எந்தப் பெண்ணுக்கும் ஏதாவது ஒரு விதத்தில் இப்படி ஓர் அழகு இருக்க முடியுமா?''

''ஆமாம், எந்தப் பெண்ணுக்கும்.''

''உடல் பருமனாக இருந்தாலும் கூடவா?''

''ஆமாம்! அதுவே தடை இல்லை. அவளுடைய மற்ற அம்சங்கள், குண அழகுகள் தாம் முக்கியம்.''








"மீனம்பாக்கம் வழியாகப் போவதா லிருந்தால் எழும்பூருக்கு நம்மை ஏற்றிச் செல்வதில் டாக்ஸி டிரைவருக்கு ஆட்சேபம் இல்லையாம்."




"சிறுகதையின் பாக்கிப் பக்கங்கள் வெளியே கட்டை வண்டியில் இருக்கின்றன!"

சித்ராவின் முகம், ஒரு நம்பிக்கையின் இங்கிதத்தில் முழு ஒளி விட்டது.

ஒருநாள் பிற்பகல் சிற்றுண்டிக்கு வெளியே போனார்கள் இருவரும். சிற்றுண்டியின் போது 'ஜுக் பாக்சில்' இனிமையான அந்த இசை கேட்டுக் கொண்டே இருந்தது. திரும்பி வந்து காரில் ஏறும்போது அந்தப் பாட்டை மெல்ல, பொய்க் குரலில் பாடினாள் சித்ரா.

"நைஸ். உங்கள் குரல் ரொம்ப அழகாக இருக்கிறதே?" என்று வியப்போடு சொன்னான் விகவம்.

"குரல் அழகாயிருந்து என்ன செய்கிறது?"

"ஒரு பெண்ணின் அழகில் அது முக்கியமான அம்சம். என்னைப் போன்ற குரல் இருந்து பேசினால், அந்தப் பெண் எவ்வளவு அழகாக இருந்து என்ன பிரயோசனம்?" என்றான் விகவம். இரண்டு பேரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

அன்று கொஞ்சம் அதிகமான வேலை. இருவரும் எழுந்து நின்றபோது மணி ஆறுக்கு மேல் ஆகிவிட்டது. பத்து நாட்களாகப் பழகிவிட்ட மன அண்மையில், குரலில் ஒரு கவாதீனத்துடன், "சித்ரா, உனக்கு நான் ஒன்று சொல்லலாமா?" என்று கேட்டான்.

"தாராளமாக—"

"உன்னுடைய கால் செருப்புச் சரியில்லே. குதிகாலில் இன்னும் சற்று உயரம் தேவை. இவ்வளவு அகலமான பார்டர் போட்ட புடவை உனக்குப் பொருத்தம் இல்லே. மொட மொடவென்ற இந்த மாதிரிப் புடவையும் தேவையில்லே. உன்னுடைய நல்ல 'பிகரை' அது கெடுத்து விடுகிறது."

"நான் அழகாகத் தோன்ற வேண்டும் என்று நினைத்ததேயில்லே. அதில் அக்கறை செலுத்தியதும் இல்லே."

"ஏன்?"

"என்னுடைய உடற் பருமனுக்கும், இளமை இல்லாத தோற்றத்துக்கும் அதெல்லாம் எதற்கு?"

"வில்லி! உன்னுடைய தோற்றத்துக்கு ஒரு குறைவும் இல்லே. அதை நீ சரியாகப் பயன்படுத்திக் கொள்ளவில்லே என்றுதான் சொல்வேன். நான் சொல்லும் யோசனைகளை நீ ஏற்றுக் கொண்டு செய்து பாரேன்."

அவள் விழிகளில் வியப்புத் தெரிய நிமிர்ந்து பார்த்தாள். விகவம் சொல்லிக் கொண்டே போனான். "சற்றுப் பெரிதாகக் காதில் ஒரு வளையம் — இந்தத் தோடு வேண்டாம். கூந்தலைக் கொஞ்சம் தளர விட்டுப் பின்னிக் கொள்ளலாம். கழுத்தில் சங்கிலியும் பதக்கமும் வேண்டாம். இரட்டை வரிசையாக ஒரு முத்து மாலே..."

ஒரு வாரம் அந்த ஒத்திகை நடந்தது. ஒவ்வொரு நாளும் ஒரு புது நம்பிக்கை அவள் நெஞ்சில் மலர்ந்து கொண்டே வந்தது.

"நான் நாளேக்குக் கிளம்பிப் போகிறேன். இரண்டு வாரங்களுக்குப் பிறகு வருவேன். இங்கே ஒரு 'பாஷன் பரேட்' இருக்கிறது. அதை நீதான் நடத்த வேண்டும். 'மைக்கின் முன்னுல் நின்று பேசி, லாகவமான குறிப்பினுல் பார்ப்பவர்களைக் கவர்ந்து..."

"நானு?" என்று கைகளைப் பிசைந்து கொண்டாள் சித்ரா.

"ஏன்? உன்னேவிட அழகான குரலும், எடுப்பான தோற்றமும் உள்ள இன்னெரு பெண் எங்கே கிடைக்கப் போகிறுள்?"

சித்ரா தலையைக் குனிந்து கொண்டாள். இத்தனே நாட்களுக்குப் பிறகு இப்படி ஒரு பாராட்டு? அதுவும் அழகும் வடிவுமாகக் கம்பீரத்துடன் நிற்கும் விகவத்திடமிருந்து? அதுவரை அவளே அநுபவித்திராத நாணம் அவள் கன்னத்தில் இட்டாகப் பூத்தது.

விகவம் கிளம்பிப் போய்விட்டான். அவன் விமான நிலையத்துக்குப் போய் வழி அனுப்பி விட்டு வந்தாள். போகு முன் அவனிடம் அவன் கொடுத்து விட்டுச் சென்ற அழகான சிவப்பு ரோஜா, அதைத் தலையில் செருகிக் கொண்டபோது, நெஞ்சில் ஒளி வீசிய மனேகரமான நினைவுகளின் கதிர்கள் —

அது அவளுக்குப் புரியாததொரு புதுப் பருவமாக இருந்தது. ஒவ்வொரு பேச்சிலும், அங்க அசைவிலும் கவிதை கண்டது போன்ற நயம். யோசனை ஒவ்வொன்றிலும் கனவின் அழகு தெரியும் பார்வை இளக்கம்.

அவளுடைய அம்மாவுக்கு அது ஓரளவு புரிந்தது. அந்த நினைப்பே ஒருபுறம் தெம்பாகவும், மறுபுறம் கலக்கமாகவும் இருந்தது. எந்த நம்பிக்கையில் மனக் கோட்டை கட்டுகிறாள் இந்தப் பெண்?

ஏழாம் தேதி நடக்கவிருக்க 'பாஷன் பரேடு'க்கு ஐந்தாம் தேதியே வந்து சேர்ந்து விட்டான் விகவம். அவளுக்கு 'போன்' செய்திருந்தான். ஹோட்டல் அறைக்கு 'லிப்டி'ல் போகும்போதே அவள் நெஞ்சம் ஒரு பூரிப்பில் உயர்ந்தது.

அறை வாசலில் அவள் வந்து நின்றதும், அவளை வியப்போடு பார்த்தவனும், பிரமித்து உட்கார்ந்து விட்டான். அந்த நிறத்தையும், உயரத்தையும், ஒப்பனைக் கலையையும், உடையிலும் அலங்கரிப்பிலும் மெருகாய்ப் படர்ந்திருந்த பண்பையும் பார்த்துக் கொண்டே அயர்ந்து போனவனைப் போல் அமர்ந்திருந்தான்.

''சித்ரா! நீ பார்ப்பதற்குப் பிரமிக்க வைப்பது போல இருக்கிறாய்!''

'எல்லாம் உங்களால் அல்லவா விகவம்? ஏன்? இதெல்லாம் உங்களுக்காகத்தானே விகவம்?' என்று நினைத்துக் கொண்டாள் சித்ரா.

'டேப் ரிகார்டரை' வைத்து இருவருமாக அவள் பேச வேண்டியதை ஒத்திகை பார்த்தார்கள். அவள் பேசிய விதமும், கற்றுக் கொண்ட நேர்த்தியும் அவனுக்குத் திருப்தியாக இருந்தன. மறு நாள் அவள் பேசியவற்றை 'ரிகார்டரில்' போட்டுப் பார்த்தார்கள்.

''வெகு நன்றாக அமைந்திருக்கிறது சித்ரா. என்னுடைய முயற்சிக்கு முழு வெற்றி. முதலில் உன்னிடமே உனக்கு ஒரு தன்னம்பிக்கையை ஏற்படுத்தியது. இரண்டாவது இப்படி ஒரு பணிக்கு உன்னைத் தயார் செய்து விட்டது. எனக்கு ரொம்ப மகிழ்ச்சி. என் வேலை ரொம்ப நன்றாக முடிந்து விட்டது.''

'முடிந்து விட்டது' என்ற சொற்களைக் கேட்டதும் அவள் மனத்தில் ஒரு வேதனை பொங்கிற்று. இதற்காகவா காத்திருந்தாள் சித்ரா?

''அப்புறம்? இனிமேல் பம்பாய் வாசம் தானா?''

''ஆமாம், சித்ரா! எனக்கு இன்னும் ஒரு வருஷத்துக்கு அங்கே மும்முரமான வேலை இருக்கிறது. கொஞ்சம் கொஞ்சமாக ஊன்றி விட்ட என் பெயரை நிலைநாட்டியாக வேண்டும். சிந்திக்கக்கூட நேரம் இல்லாமல் வேலை இருக்கும்.''

விகவம் அவளுக்கு எதிர்பார்ப்பைத் தரும்படி என்ன செய்து விட்டான்? அவள் அவ்விதமாய் மனக்கோட்டை கட்டியிருந்தால் அதற்கு ஆதாரம்தான் என்ன? அவன் சந்திக்கும், வேலை மூலம்பார்க்கநேரும் எத்தனையோ அழகான பெண்களில் அவளும் ஒருத்தியாக இருக்கலாம். அவ்வளவுதானே?

'பாஷன் பரேடு' தொடங்கி விட்டது. அவன் அவளை அழைத்துச் சென்று 'மைக்'கின் முன் நிறுத்தினான். வாய் பேசாமல் அவள் பின்தொடர்ந்தாள். அவன் தன்னை ஒரு கருவியாக உபயோகப்படுத்துகிறான் என்ற ஆத்திரம் ஒருபுறம் பொங்கிற்று. ஆனால் அவள் நாடும் சந்தர்ப்பத்தை விலக்க மனத்தில் வலிமை இல்லை.

அப்படி அவன் அவளை முக்கியமான இடத்தில் நிறுத்தியதே அவளுடைய தோற்றத்துக்கு ஒரு வாளிப்பையும் புது மலர்ச்சியையும் தந்ததோ? 'பாஷன் பரேடு'க்கு இருந்த கைதட்டல் அவளுடைய குறிப்புக்களுக்கும் இரட்டை மடங்காக ஒலித்தது. எவ்வளவோ மகிழ்ச்சியாக ஏற்றிருக்கலாம். ஆனால் ஓர் ஏக்கம்தான் பொங்கிற்று.

அவள் வீடு திரும்பும்போது மணி எட்டு ஆகிவிட்டது. ''கங்கிராஜுலேஷன்ஸ்'' என்று சொல்லி அவளை வழியனுப்ப வந்த விகவம், அப்புறம் அவளைச் சந்திப்பதைப் பற்றிச் சொல்லவில்லை. வீட்டுக்கும் கூட வரவில்லை. அவள் என்னென்னமோ எதிர்பார்த்தாள். ஆனால் இப்போது? அவளைச் சுற்றி இருந்த உலகம் இடிந்து விட்டது போன்ற உணர்வு.

வீட்டுக்கு வந்து உடைகளை மாற்றிக் கொண்டு ரேடியோவைத் திருப்பினாள். அதன் அருகே உட்கார்ந்து கொண்டாள். அம்மா பின்புறம் வேலையாகப் போய்விட்டாள்.

வாசலில் கார் ஒன்று வந்து நின்றது. சப்தம் ஓய்வது கேட்டது. கதவைத் திறந்து வெளியே எட்டிப் பார்த்தாள். விகவம்!

உள்ளே வந்து உட்கார்ந்தவன் ''அம்மா எங்கே? நான் பேசலாமா அவர்களிடம்?'' என்றான்.

''எதற்கு? அவர்களிடம் சொல்லிக் கொண்டு போக வந்திருக்கிறீர்களா?''

''இல்லை. அனுமதி கேட்பதற்குத்தான் வந்திருக்கிறேன்.''

''எதற்காக அவர்கள் அனுமதி?''

''என் வாழ்க்கையில் முக்கியமான ஒரு சந்தர்ப்பத்தில் — மும்முரமான இக்கட்டான நிலையில் — எனக்கு மிகவும் அவசியமான ஒரு வாழ்க்கைத் துணையைத் தேர்ந்து கொள்வதற்கு. இதுவரையில் நான் சந்தித்த பெண்களில் என்னை மிகவும் கவர்ந்த ஒரு பெண்ணை நான் என்றும் என்னுடன் உதவியாக வைத்துக் கொள்வதற்கு!''

எப்போதோ அவன் சொல்லக் கேட்ட ஞாபகம். ''அழகுள்ள இடத்தில் அதை எனக்குப் பாராட்டவும் தெரியும்!''

சித்ராவின் நெஞ்சில் ஒரு சிட்டுக் குருவி படபடவென்று அடித்துக் கொண்டது. அதன் கருகருப்பைத் தாங்குவதற்குப் பயமாகக் கூட இருந்தது. அவளுக்கு என்ன பதில் சொல்வது என்று தெரியவில்லை. நம்ப முடியாமல் உற்றுப் பார்த்தாள்.

''என்ன பேச்சையே காணோம் மிஸ்?''

''அம்மாவின் அனுமதி இருக்கட்டும். பெண்ணிடம் கேட்டீர்களோ?'' என்றாள் சித்ரா சட்டென்று கண்ணில் பொங்கிய நீரை அடக்கிக் கொண்டு.

''உன்னையும் கொஞ்சம் சீண்டிப் பார்க்க வேண்டியது அவசியம்தான்!'' என்றான் விகவம் கண்ணைச் சிமிட்டிக் கொண்டு. உள்ளே திரும்பி ஓடியபடி அம்மாவை அழைக்கும் ஒரு பெண்ணின் குரல் அத்தனை அழகாய் அதுவரையில் அவன் காதில் விழுந்ததில்லை!

# நாளும் உங்கள் உடலுக்குத் தேவை 23 அத்தியாவசியமான ஊட்டச் சத்துக்கள்.

இதர உணவுப் பானங்கள் இவற்றிலே எத்தனை தருகிறது என்று பாருங்கள்!

## காம்ப்ளான்
## 23 ஊட்டச் சத்துக்களையும் தருகிறது.

குறிப்பைப் படியுங்கள்.

**புரதம்**
திசுக்களையும் செல்களையும்
உருவாக்க, பாதுகாக்க

**லிப்பிடுகள்**
பொங்கிப் பெருகும்
சக்திக்கே.

**கார்போஹைடிரேட்**
சக்தி மிகுந்த உடல்
வலிமைக்கே.

**கால்ஷியம்**
ஆரோக்கியமான பற்கள்,
எலும்புகளுக்கு

**பாஸ்பரஸ்**
உடல் சாப்பிகள், பற்கள்,
எலும்புகளுக்கு

**சோடியம்**
இரத்தம் சரிமுறையில்
செயலாற்ற.

**குளோரைடு (Cl வடிவில்)**
தசை இயக்கத்திற்கு.
பிடிப்புக்களைத் தவிர்க்கும்.

**பொட்டாஷியம்**
மனத் தளர்ச்சி, தசை அயர்ச்சி
எதிராகப் போராட.

**இரும்புச் சத்து**
ஆரோக்கியமான இரத்தத்திற்கே

**அயோடின்**
தைராய்டு சுரப்பி
தரமாக இயங்க.

**வைட்டமின் ஏ**
ஆரோக்கியமான கண்களுக்கு.

**வைட்டமின் பி**
வளர்ச்சி, உறுதியான நரம்
புகள்; 'பெரி-பெரி' நோய்
பீடிக்காதிருக்க.



**ரிபோஃப்ளேவின்**
ஆரோக்கியமான வாய்,
நாக்கு, உதடுகள்,
கண்களுக்கு.

**நிக்கோடினமைடு**
ஒளிமிக்க ஆரோக்கியமான
சருமத்திற்கே.

**கால்ஷியம் பென்டோதெனேட்**
நரம்புகளையும் தசைகளையும்
வலுப்படுத்த

**கோலின்**
கல்லீரல் ஆரோக்கியமாக இயங்க.

**பைரிடாக்ஸின் (B6)**
தசைகளை இளைப்பாற்ற

**வைட்டமின் பி12**
இரத்த சோகை பீடிக்காதிருக்க.

**ஃபாலிக் அமிலம்**
புதிய இரத்த செல்களை
உருவாக்க உறுதுணை.

**வைட்டமின் சி**
நோயெதிர்ப்புச் சக்தியைப்
பெருக்கி, ஸ்கர்வி நோய் வராதிருக்க.

**வைட்டமின் டி**
உறுதியான பற்கள்,
எலும்புகளுக்கு.

**வைட்டமின் ஈ**
கரு வளர்ச்சிக்கு.

**வைட்டமின் கே**
இரத்தம் இயற்கையான
முறையில் உறைய உதவும்.

**இதர சிறுசிறு பொருட்கள்**
வைட்டமின்களை உடல்
உறிஞ்சிக் கொள்ளவும்
சுரப்பிகள் நன்கு
இயங்கவும் உதவும்.

உலகெங்கும் காம்ப்ளான் பருகும் இலட்சக்கணக்கானோரில் வளரும் குழந்தைகள் உண்டு. சுறுசுறுப்பான இல்லத்தரசிகள், பரபரப்புடன் இயங்கும் அலுவலர்கள், கருத்தரித்த தாய்மார்கள், பாலூட்டும் அன்னையர், வயது முதிர்ந்தோர், விளையாட்டு வீரர்கள், பருமன் குறைப்போர் எனப் பலப்பல வகையினர் உண்டு. எளிதில் ஜீரணிக்கக் கூடிய காம்ப்ளான், டாக்டர்கள் சிபாரிசு செய்வது. வயிற்றுப்புண், வயிற்றுப் போக்கு, இரத்தபேதி, ஃப்ளு ஜுரம், பல்நோய் உள்ளவர்கள் கூட ஜீரணிக்கத் தக்கது. ஆரோக்கியமான சுவைமிகு பானம் தயாரிக்க, டப்பாவின் மீதுள்ள குறிப்பைப் பின்பற்றவும்.

பருகுவீர் **காம்ப்ளான்®**
பரிபூரண உணவு
போஷாக்குப் பற்றாக்குறையிலிருந்து
பாதுகாக்கவே.

உலகெங்கும்
உபயோகிக்கப்
படுவது—
**க்ளாக்ஸோ**
ஆராய்ச்சியில்
உருவானது.

# பாருங்கள் எப்படி ப்யூரிடாஸ் ஃபில்ட்டர்கள் சாதாரணக் குழாய் நீரை வடிகட்டி அசுத்தங்களை நீக்கி நூற்றுக்கு நூறு தீங்கற்ற நல்ல குடி நீராக ஆக்கிவிடுகிறது

**நீர்வழிப் பரவும் நோய்களான காலரா, டைஃபாயிடு, சீத பேதி, இரைப்பை-குடல் அழற்சி முதலியவற்றைத் தடுத்துக் காக்க இதைவிட மேலான உத்தரவாதம் எதுவுமில்லை.**




**ப்யூரிடாஸ் இலேசானது, உடையவே உடையாது. தூக்கிச் செல்ல வாகானது, துப்புரவாக்க இலகுவானது.**

**உங்கள் ஆதரவுக்குரியவர்களுக்கு ஆதரவளியுங்கள். இன்றே பெறுவீர் ஒரு ப்யூரிடாஸ்**





இலவசக் கைப் புத்தகத்திற்கு எழுதுக:

**பல்சாரா**
நலமான வாழ்க்கைக்கு நவீனமான வசதிகள்
BALSARA

CHAITRA-BLS-19 TAM

# ஃபாஷனுக்கு தோஷமில்லை!

சீதா



"வடநாட்டு லஸ்ஸி இப்போது தென்னாட்டிலே பிரமாதமாகப் படையெடுத்திருக்கிறது. மூலைக்கு மூலை லஸ்ஸி கடைகள். ஒவ்வொரு கடை வாசலிலும் சாலையில் நின்ற வாக்கிலேயே மக்கள் லஸ்ஸி வாங்கிக் குடிக்கப் பழகிக் கொண்டு விட்டார்கள்" என்றான் சுந்தர்.

"நம்ம தென்னாட்டின் இட்லியும் வடையும் வட நாட்டில் மூலை முடுக்கெல்லாம் படையெடுக்கவில்லையா?" என்றார் சங்கரன்.

"லஸ்ஸி ரொம்ப நன்றாக இருக்கிறது. மோர் புளிக்காமல் இத்தித்துக் கொண்டு எவ்வளவு நன்றாக இருக்கிறது! அதற்கு மேல் மிதக்கும் பாலாடை வேறு! குளிர்ச்சியாக இருக்க ஐஸ் வேறு! லஸ்ஸியின் ருசியே தனிதான்!" என்றான் சாரு.

"லஸ்ஸி — உடம்புக்கு நல்லது. காப்பிப் பழக்கம் தமிழ்நாட்டிலே குறையலாம்!" என்றார் சங்கரன்.

"உடைகளில், தலைபின்னிக் கொள்வதில், புடவைகளில் பாஷன் மாறுவதுபோல் சாப்பாட்டு விஷயத்திலும் பாஷன் மாறுகிறது போலிருக்கிறது!" என்றாள் அகிலாண்டம்.

"பாஷன் எப்படி மாறுகிறது தெரியுமா? ஒரு சம்பவம் சொல்கிறேன். தில்லியிலே ஒரு மாமி, ஐந்தாறு வருஷங்களுக்கு முன்னே, பெட்டியிலிருந்து தன் பட்டு ரவிக்கையை எடுத்துப் போட்டுக் கொள்ளப் போனாளாம். ரவிக்கையின் முதுகுப்புறம் நட்ட நடுவில் ஒரு பைசா அளவுக்குப் பூச்சி அரித்திருந்ததாம். அந்த மாமிக்கு அவ்வளவு நல்ல பட்டு ரவிக்கையை தூர எறிந்துவிட மனசாகவில்லை. பூச்சி அரித்த இடத்தை வெட்டி எறிந்து, தைத்துப் போட்டுக் கொண்டு போனாளாம். பாதி முதுகு தெரிந்தாலும், புடவையைப் போர்த்தி மறைத்துக் கொள்ளலாம் என்ற தைரியத்தோடு போனாளாம். பார்ட்டியில் வந்த பெண்களின் கண்களில் போர்த்திக் கொண்டிருந்த தலைப்புக்குக் கீழிருந்த — பாதி முதுகைக் காட்டிக் கொண்டிருந்த — குட்டை ரவிக்கை பட்டு விட்டதாம். இது ரொம்ப நேர்த்தியாக இருக்கிறது என்று பெண்கள் தீர்மானித்து, குட்டை ரவிக்கை பாஷனைத் தொடங்கி வைத்தார்களாம்!" என்றான் சுந்தர்.

"சாரு! 'பெண்கள் பாஷன் உருவாகிறது' என்று தீஸிஸ் எழுதப் போகிறார் போலிருக்கிறது உங்க அண்ணன் சுந்தர். நல்ல ஆராய்ச்சி செய்து வைத்திருக்கிறார்! டாக்டர் பட்டம் நிச்சயம் கிடைக்கும்!" என்று கேலி செய்தாள் ஹேமா!

"நான்கூட ஆண்கள் பாஷன்கள் எப்படி எப்படி மாறுகின்றன? ஏன் மாறுகின்றன என்று ஆராய்ச்சி செய்து வைத்திருக்கிறேன்!" என்றான் சாரு!

"புஷ் ஷர்ட் எப்போது எப்படி வந்தது சொல் பார்க்கலாம்!" என்று சவால் விட்டான் வேணு.

"புஷ் ஷர்ட்டு எப்படி வந்ததாவது. அதுதான் எப்போதுமே இருக்கிறதே!" என்றான் சாரு.

"பார்த்தியா? பார்த்தியா? இதுதான் நீ தெரிந்த கொண்ட இலட்சணம்! உனக்கு எப்படி பி. எச்டி. கிடைக்கும்!" என்றான் வேணு.

"அது எப்ப வந்தது?" என்று கேட்டான் சாரு.

"இரண்டாவது யுத்த காலத்தில்..." என்றான் வேணு.

"ஏன் வந்தது சொல் பார்க்கலாம்?" என்று வேணுவையே கேட்டார் சங்கரன்.

அவன் திருதிருவென்று விழித்தான்...

சங்கரன் கூறினார்: "இரண்டாவது உலக யுத்தத்தின் போது இந்தியாவுக்கு வந்த அமெரிக்கப் படை வீரர்களால் இந்தியாவின் வெய்யிலையும் வெப்பத்தையும் தாங்க முடியவில்லை. தங்கள் கோட்டு ஷர்ட்டு பனியனைக் கழற்றிப் போட்டு வந்தார்கள். அப்போது அமெரிக்க ராணுவ அதிகாரிகள் பார்ப்பதற்குக் கோட்டு போலவும், உண்மையில் ஷர்ட்டாகவும் இருக்கும் புஷ்கோட்டை அமெரிக்க ராணுவத்தினருக்கு அளித்தார்கள். அவைகளைப் பார்த்து நம்மவர்களும் காப்பியடித்தார்கள். இப்படித்தான் தோன்றியது புஷ்கோட், புஷ்ஷர்ட் பாஷன்!"

"பாஷன்கள் எல்லாமே தேச கால வர்த்தமானத்தைப் பொறுத்தே அமைகின்றன. அதைப் புரிஞ்சிக்காம பிரிட்டனிலே டை கட்டிக் கொண்டார்கள் என்பதால் இங்கே நாமும் டை கட்டிக்கணும்னு ஆரம்பிச்சுட்டோம்!" என்றாள் அன்னபூரணியம்மாள்.

"ஃபாஷனுக்கு தோஷமில்லை! எதை வேணுமானாலும் காப்பி அடிக்கலாம் போல் இருக்கு" என்றாள் அகிலாண்டம்மாள்.



# பொழுது போக்கு

பி.எஸ்.எம்

### மூன்று நீச்சல் குளங்கள்!

"வாழ்க்கை முழுதும் ஏழையாக இருந்தவன் திடீரென்று ஓர் இரவில் பெரும் செல்வம் திரட்டினான். அந்தத் திரண்ட செல்வத்தைப் பல வழிகளிலும் செலவழித்தான்! நண்பர்களை அழைத்துத் தன் திரண்ட செல்வங்களை, சொத்துக்களைக் காட்டினான். "வாருங்கள் என் வீட்டைச் சுற்றியுள்ள விசாலமான தோட்டத்தை வந்து பாருங்கள்!" என்றான், புதிய செல்வந்தன். எனது மூன்று நீச்சல் குளங்களைப் பாருங்கள்!"

"மூன்று நீச்சல் குளங்களா, எதற்கு?" என்று நண்பர்கள் வியந்து கேட்டனர்.

"ஒன்று குளிர்ந்த நீருக்கு, மற்றொன்று வெந்நீருக்கு! ஒன்றில் நீரே கிடையாது!"

"குளிர்ந்த நீரும், வெந்நீரும் உள்ள நீச்சல் குளங்கள் இருப்பது சரிதான்! நீரே இல்லாத நீச்சல் குளம் எதற்கு?"

உடனே புதிய பணக்காரன் பகர்ந்தான்: "உமக்கு ஆச்சரியமாய்த்தானிருக்கும்! ஆனால் எனது நண்பர்களில் பலருக்கு நீச்சல் தெரியாதே!"



இந்தப் படத்திலுள்ளவற்றில் ஓர் ஒற்றுமை காணப்படுகிறது. அது என்ன?

விடை: எதிர்ப்பக்கம்

"நம்ம அனு அழறதுகூட ஏதோ குயில் கூவற மாதிரி எத்தனை இனிமையா இருக்கு!"

"அது நம்ம குழந்தை இல்லே. அடுத்த வீட்டுக் குழந்தை!"

"அதானே கேட்டேன். ரொம்ப நாழியா கரடியாக் கத்தறதேன்னு!"

- சாமா



### ராணியா?

நியூயார்க் ரேடியோ ஸ்டேஷனிலிருந்து ஒரு செய்தி விமர்சகர் தம் நண்பருக்குப் போன் செய்தார்.

"அவசரம்! நான் இன்னும் பத்து நிமிஷங்களில் ரேடியோவில் பேச வேண்டும். அதற்கு உம் உதவி தேவை! நீங்கள் செஸ் விளையாடுவீர்கள் இல்லையா?" என்று கேட்டார்.

நண்பர் "ஆமாம்!" என்றார்.

உடனே செய்தி விமர்சகர் தமது சந்தேகத்தை விவரித்தார்: "நான் தெரிந்து கொள்ள வேண்டியது இதுதான்: உலக அரங்கில் செஸ் விளையாட்டாக உருவகப்படுத்துகிறேன். ஐரோப்பாதான் செஸ் பலகை. உலக சமாதானம் 'பான்' காய்! அப்படியானால் நான் அணுகுண்டை என்னவென்று சொல்லலாம்?"



நிக்ஸனைத் தாக்கிக் கிளம்பும் 'வாட்டர் கேட்' குமிழ்கள் அலைஅலையாகக் கிளம்பி வந்துகொண்டேயிருக்கின்றன. சொல்லப் போனால் அவற்றை உடைக்கப் பார்த்து அசந்துவிட்டார் நிக்ஸன். அவற்றின் எண்ணிக்கையை உங்களால் கணக்கிட்டுச் சொல்ல முடியுமா ?

விடை: பத்தொன்பது குமிழ்கள்.



''இந்த விபத்து எப்படி நேர்ந்தது ?''

''என் மனைவியினால்தான். அவள்தான் பக்கத்திலிருந்த படி அப்படி ஓட்டு; இப்படி ஓட்டுன்னு சொல்லிக் கொண்டிருப்பாள் - தூங்கி விட்டாள் !''

- சாமா

பிரெஞ்சுப் புரட்சியின்போது எழுந்த துணுக்கு இது. ஒரு பெரிய கூட்டம் ராணுவத்துக்கும் பயந்து வேகமாக ஓடிக்கொண்டிருந்தது. பிரெஞ்சு அதிகாரிகள் ஒரு மனிதனைத் தடுத்து நிறுத்திக் கைது செய்ய முயன்றார்கள். அவன் கூறினான்: ''என்னைப் போக விடுங்கள். போக விடுங்கள். நான் அந்தக் கூட்டத்தைத் தொடர்ந்து செல்ல வேண்டும் — நான் அவர்களின் தலைவன்!''

''நான் உடனே பல் வைத்தியரைப் பார்த்தாக வேணும். நான் ஒரு கண் வைத்தியர். பல் வலியினால் கண் வைத்தியத்தைக் கவனிக்க முடியவில்லை!''

''மன்னிக்கணும்!'' என்றாள் வரவேற்பு உபசாரிணைப் பெண். ''பல் வைத்தியர் கண்ணாடி மாற்றிக் கொள்ளக் கண் வைத்தியரிடம் போயிருக்கிறார்!''.



உலகில் மிகப் பெரிய ஹோட்டல் மாஸ்கோவில் உள்ள ஹோட்டல் 'ருஸியா'. இந்தப் பிரும்மாண்டமான ஹோட்டலில் 3200 அறைகள். 6000 விருந்தினர்கள் தங்கலாம். பதினான்கு மாடிகள் கொண்ட மூன்று கட்டடங்களாக ஹோட்டல் 'ருஸியா' அமைந்துள்ளது.

☐ அந்தப் படத்திலுள்ளவை ஒவ்வொன்றும் அந்த வகை இனத்தில் மிகப் பெரியது என்று புகழ் பெற்றது. மிருகங்களுள் யானை மிகப் பெரியது. பறவைகளுள் அல்பட்ராஸ் மிகப் பெரிய கடல் பறவை: கடல் வாழும் ஜந்துக்களில் திமிங்கலம் மிகப் பெரியது. ஆஸ்ட்ரிச் இலப் பறவைகளுள் மிகப் பெரியது!

# வளரும் குழந்தைகளுக்கு வாய்ப்பான துணை இன்க்ரிமின்*!

துள்ளித் திரியும் கன்றுப் பருவம்...ததும்பி வழியும் சக்தி...பொங்கிப் பெருகும் பூரிப்பான ஆரோக்கியம்!

இதுதான் வளரும் பருவம். உடலும் உள்ளமும் ஓங்கி வளரும் இச் சமயத்தில் உங்கள் குழந்தைகளுக்கு இன்க்ரிமின் வழங்கி வாருங்கள். பலனளிக்கும் வைட்டமின்கள், இரும்புச் சத்து, அதி முக்கிய அமினோ அமிலம். வளரும் பருவத்தில் அத்தியாவசியமான இவை அனைத்தும் அடங்கியது இன்க்ரிமின் டானிக்.




வளரும் பருவம்!

## இன்க்ரிமின்*

**இன்க்ரிமின் டானிக் வளரும் பருவத்தினருக்கு ஒரு வரப்பிரசாதம்**




'டபிள்யூ' என்ற முதல் எழுத்துள்ள வொரல், வீக்ஸ், வால்காட் ஆகிய மூவரும் மேற்கு இந்தியக் கிரிக்கெட்டின் புகழ் ஓங்கக் காரணமாக விளங்கியவர்கள். இந்திய கிரிக்கெட்டின் வரலாற்றில் விஜய் மர்ச்செண்ட், விஜய் ஹஸாரே, விஜய் மஞ்ச்ரேகர் — ஆகிய மூன்று 'விஜய்'களும் நிலையான இடம் பெற்றுத் திகழ்பவர்கள். இம்மூவரின் ஆட்டமும் ஏறக்குறைய ஒரே தன்மையது. ஸி. கே. நாயுடு, பட்டோடி போன்று அதிகமாக, 'ஸிக்ஸர்' அடித்து ரசிகர்களின் கைதட்டலை இவர்கள் பெற்றதில்லை. எனினும் பந்தைத் தரையோடு அடித்துப் பல சதங்கள் எடுத்தவர்கள். இந்திய அணியின் காப்டனாக விளங்கிய மர்ச்செண்ட், ஹஸாரே இருவருமே 'ஒரு பந்தயத்தில் ஜயிப்பது துர்லபம் என்று நிச்சயமாகத் தோன்றினால், அதைக் கோட்டை விடாமல் காப்பாற்ற வேண்டியது அவசியம்' என்ற கொள்கை உடையவர்கள். அதாவது, பல்லைக் கடித்துக் கொண்டு 'டிரா'வுக்கு ஆடுவது.

ஹஸாரேயின் ஆட்டத்தைப் போலவே அவரது சுபாவமும். அடக்கமே உருவானவர். ஒரு பக்கம் விக்கெட்டுகள் மளமளவென்று சரிந்து கொண்டிருந்தாலும் மறு பக்கத்தில் பாறை போன்று நின்று விக்கெட்டைப் பாதுகாப்பதில் ஈடு இணையற்றவர். இந்தியாவிலேயே அதிக சதங்கள் எடுத்த பாட்ஸ்மன். இவர் எடுத்த 57 சதங்களுள் பத்து, இருநூறு ரன்களைத் தாண்டியவை. முந்நூறுக்கு மேல் போனவை இரண்டு. தமது கிரிக்கெட் வாழ்க்கையில் 17,000க்கு மேற்பட்ட ரன்களை எடுத்துக் குவித்துள்ளார். இவற்றுள் 6300க்கு மேற்பட்ட ரன்கள் ரஞ்சி கோப்பைப் பந்தயங்களில் திரட்டியவை. ஹஸாரேயின் இந்தச் சாதனையை இதுவரை இங்கு யாருமே மிஞ்சவில்லை! ஒரு கிரிக்கெட் சீசனில் ஆயிரம் ரன்கள் முதன் முதலாக எடுத்தவர் ஹஸாரே. 1943–44ல் நாலே பந்தயங்களில் இச்சாதனை புரிந்தார். இங்கிலாந்து, ஆஸ்திரேலிய கிரிக்கெட் 'டூர்'களிலும் ஹஸாரே ஆயிரம் ரன்களுக்கு மேல் எடுத்துள்ளார். அவர் வெறும் பாட்ஸ்மன் மட்டுமன்று. மொத்தம் ஐந்நூறுக்குமேற்பட்ட விக்கெட்டுக்களை (புகழ்மிக்க டான் பிராட்மனின் விக்கெட் உட்பட) மீடியம் வேகப் பந்து வீச்சால் வீழ்த்தியவர்! அடிலெய்டு டெஸ்டில் லிண்ட்வால், மில்லர் இருவரது புயல் வேகப் பந்து வீச்சை எதிர்த்து நின்று ஒவ்வொரு இன்னிங்ஸிலும் சதம் எடுத்த பெருமைக்குரியவர். சுமார் கால் நூற்றாண்டுக் காலம் ஹஸாரேயின் ஏகபோக உரிமையாக இருந்து வந்த இந்த ரெக்கார்டை இரண்டு வருடங்களுக்கு முன்புதான் மேற்கு இந்தியத் தீவுகளில் நடந்த டெஸ்டில் கனில் கவாஸ்கர் பங்கு போட்டுக் கொண்டார்!

கிரிக்கெட்டில் பயிற்சி தேவையா என்பது பற்றி ஹஸாரேயின் கருத்து: நல்ல 'கோச்'சின் கீழ் கிரிக்கெட் ஆட்டக்காரர் தமது திறமையை வளர்த்துக் கொள்ள முடியும். கிரிம்மெட்டிடம் நான் பயிற்சி பெற்ற பிறகு என் ஆட்டத்தின் தரம் உயர்ந்ததை நான் உணர்ந்தேன். ஒரு திறமையுள்ள 'கோச்' தமது மாணவரின் 'ஸ்டைல்'லில் குறுக்கிட மாட்டார். 'இந்தப் பந்தை இப்படித்தான் விளையாட வேண்டும்' என்று ஏட்டுச் சுவடிப் பாடம் சொல்லித் தரமாட்டார். இது பற்றி ஒரு சுவையான சம்பவத்தைக் கூறலாம். பிடிவாதமுள்ள ஒரு 'கோச்' தமது மாணவர் ஒரு பந்தை பவுண்டரிக்கு அடித்து முடித்தவுடன், அந்த மாணவரின் கால்கள் எந்த நிலையில் இருக்க வேண்டும் என்று அவர் விரும்பினாரோ அப்படி இல்லாதது கண்டு துணுக்குற்றார். 'ஹேய்! உன் பாதங்கள் எங்கே இருக்கின்றன என்று பார்!'




என்றார் கோச். மாணவர், 'அது இருக்கட்டும்; பந்து எங்கே இருக்கின்றது என்பதைப் பாருங்கள்!' என்றாராம் சுடச் சுட. மாணவரின் இயல்பான ஆட்டப் போக்கை மாற்றுவது கோச்சின் பணி அன்று என்பது ஹஸாரேயின் கருத்து.

நல்ல வேகத்துடன் பந்து வீசக்கூடியவர்கள் இந்தியாவில் உருவாகாதது குறித்து அவர் கவலை தெரிவிக்கிறார். "நிஸார், பானர்ஜிக்கு நிகரான வேகத்தில் பந்து வீசும் பௌலர்கள் நான் கிரிக்கெட் ஆடிய நாட்களில் தோன்றவில்லை. அமர்சிங் மாதிரி, 'பிட்ச்'சிலிருந்து வேகம் பெறும் 'மீடியம் பேஸ்' பந்து வீச்சுத் திறமையுள்ளவர்கள்கூட யாருமில்லை! 'பாட்' செய்வோர் வரிசையில் நாலாவது பாட்ஸ்மன் ஆக இருந்த நானே புதிய பந்தைக் கையாள வேண்டிய நிலையில் இருந்திருக்கிறேன். அமர்நாத், பட்கர், ராம்சந்த், தேசாய் ஆகியோர்கூட என் மாதிரி 'மீடியம்' வேக வீச்சாளர்களே; பாட்ஸ்மனுக்குப் பயம் ஏற்படும் அளவுக்குக் கடுமையான வேகம் எங்கள் பந்து வீச்சில் இருந்ததில்லை. இப்பிரச்னை இன்றளவும் தீராதது. விரைவில் தீரும் என்ற நம்பிக்கைக்

## ஆனந்தகிரித் திருப்பணி

பெங்களூரை அடுத்த ஹெப்பாளில் ஒரு சிறு குன்று. அதன் மீது ஆனந்தீசுவரரின் ஆலயம், வரும் பக்தர்களுக்கு ஆனந்தம் அருளுவதற்கே போல் அமைந்துள்ளது. ஆனால் பல நூற்றாண்டுகள் ஜீர்ணோத்தாரணம் செய்யப்படாமல் இலமடைந்துள்ளது. ஆனந்தகிரியைச் சுற்றிலும் தோன்றியுள்ள காலனிவாழ் மக்கள் அதைப் புதுப்பித்துக் கும்பாபிஷேகம் செய்ய முயற்சி எடுத்துக்கொண்டுள்ளனர். ஆத்யாத்ம கேந்திரம் ஒன்றும் இயங்கி வருகிறது. அதன் சார்பில் நடைபெறும் இத்திருப்பணிக்கு ஒரு லட்சத்துக்கு மேல் செலவாகும் என்று தோன்றுகிறது. ஆஸ்திக அன்பர்கள் பொருளுதவி செய்து ஆனந்தீசுவரரின் அருள் பெற வேண்டுகிறோம். பொருளுதவி அனுப்ப வேண்டிய முகவரி: டாக்டர் கே. ஐ. வாக, பொருளாளர், ஆனந்தகிரி அத்யாத்ம கேந்திரம், கரனா 1-பி, ஹாஸ்பிடல் எக்ஸ்டென்ஷன், ஹெப்பால், பெங்களூர்-560024.

கும் இடமில்லையே'' என்று கவலைப்படுகிறார், ஹஸாரே!

ஹஸாரே ஓர் அசாதாரண நிகழ்ச்சியைக் குறிப்பிடுகிறார். ''இரண்டாவது காமன் வெல்த் கோஷ்டிக்கு எதிராகப் புனாவில் ஒரு பந்தயத்தில் நான் 'பாட்' செய்து கொண்டிருந்தேன். ஜிம் லேக்கர் பந்து வீசிக் கொண்டிருக்கும் போது திடீரென்று தாது ஆட்டத்தை நிறுத்தினார். காரணம், ஒரு பெரிய எலி (பெருச்சாளி போலும்!) 'பிட்ச்'சில் ஓடி வந்ததுதான். மறுகணம் மேலே வட்டமிட்டுக் கொண்டிருந்த ஒரு கழுகு பாய்ந்து வந்து அந்த எலியைக் கவ்விக் கொண்டு போயிற்று—தன்னுடைய 'லஞ்'சுக்கு! லேக்கர் விக்கித்துப் போனார். அடுத்து அவர் வீசிய பந்து ஒரு 'லாங் ஹாப்'! நான் அதைச் சுலபமாகப் 'பவுண்டரி'க்கு அடித்துவிட்டு வானிலிருந்து வந்த உதவிக்கு நன்றி கூறினேன்!''

யார்க்ஷயருக்கு எதிராக இந்திய அணி விளையாடியது. யார்க்ஷயர் முதலில் ஆடி 300க்கு மேல் எடுத்தது. முதல் நாள் ஆட்டத்திலேயே ஓர் அணி 300க்கு மேல் எடுத்தால் உடனேயே எதிர்க் கோஷ்டியை ஆடச் சொல்லலாம் என்று அந்த சீஸனில் புதிதாக ஒரு விதியை அமுலுக்குக் கொணர்ந்தனர். முதல் நாளே 300 ரன் எடுத்து யார்க்ஷயர் அணி 'டிக்ளேர்' செய்து இந்தியாவை ஆடச் சொன்னது ஹஸாரேக்கு 'என்னவோ போல்' இருந்தது. இந்திய கோஷ்டியின் ஆற்றலை யார்க்ஷயர் காப்டன் அவமதித்ததாகத் தோன்றிற்று அவருக்கு. ஹஸாரேயும் மற்ற இந்திய ஆட்டக்காரர்களும் இதற்குப் பதிலடி கொடுக்க விரும்பினர். இந்தியா முதலில் சில விக்கெட்டுக்களை இழந்தாலும் ஹஸாரேயும் வினு மன்காடும் ஆடத் தொடங்கியதும் சூடு பிடித்தது. இருவரும் சேர்ந்து 300 ரன்கள் எடுக்கும் வரை அந்த ஜோடியை யார்க்ஷயர் பௌலர்களால் பிரிக்க முடியவில்லை! ஐந்து விக்கெட் நஷ்டத்துக்கு 490 ரன்கள் எடுத்த பிறகு இந்திய காப்டன் 'டிக்ளேர்' செய்தார். ஹஸாரே எடுத்த ரன்கள் 244 — ஆட்டம் இழக்காமல்! இந்தச் சம்பவத்தைப் படிக்கும் போது அந்த உறுதியும் திறமையும் இன்று நமது ஆட்டக்காரர்களிடம் இல்லையே என்ற ஏக்கம் எழுகிறதே!

இளைஞர்களுக்கு ஹஸாரே கூறும் நல்லுரை: தோல்வியால் மனம் தளர்ந்து தன்னம்பிக்கை குலைந்து ஆட்டத்தில் கவனக் குறைவு ஏற்படலாகாது. மேடு, பள்ளங்களைச் சமமாகக் கருத வேண்டும். வெற்றிகளும் தோல்விகளும் இறுதியில் சம நிலையாகிவிடுவதைக் காண்பீர்கள். நான் நல்ல 'இன்னிங்ஸ்' பல ஆடி என் கோஷ்டிக்கு உதவிய சில சந்தர்ப்பங்களில் என் அணி தோல்வியுற்றது. இந்தியா முதன் முதலாக வெற்றி பெற்ற டெஸ்ட் பந்தயத்தில் என் பங்கு மிக மிகக் குறைவே. ஒரு முறை காப்டனாகத் தேர்ந்தெடுக்கப்படுபவர் மறு முறை வேறு ஒருவரின் தலைமையின் கீழ் ஆடும்படியிருக்கும். தேர்வுக் குழுவின் முடிவுகளைக் கண்டு மனச் சோர்வு ஏற்படலாகாது. கிரிக்கெட்டில், நமது கோஷ்டியின் வெற்றியே முக்கியம் என்ற மனப்பான்மை அவசியம். ஒரு முறை இந்திய அணி இங்கிலாந்தில் விளையாடிக் கொண்டிருந்த போது, மாலை ஆட்ட முடிவு நேரத்தில் நான் 200 ரன்களை நெருங்கிக் கொண்டிருந்தேன். வினு மன்காட் இன்னும் சில ரன்கள் எடுத்தால் அந்த டூரில் 1000 ரன்கள் எடுத்த பெருமை கிட்டும். மறுநாட் காலை அரை மணி நேரம் ஆடினால் போதும். ஆனால், மறுநாட் காலை விக்கெட்டின் நிலைமை பௌலர்களுக்குச் சாதகமாக இருக்கவே எங்கள் காப்டன் 'டிக்ளேர்' செய்துவிட்டார். அது சரியான முடிவே. 'டர்னிங் விக்கெட்'டில் எதிர்க் கோஷ்டியை நாங்கள் நைய அடித்துக் கணிசமான வித்தியாசத்தில் தோற்க அடித்தோம். எங்கள் இருவரின் சாதனைகளுக்காக என்று காப்டன் 'டிக்ளேர்' செய்யாமல் இருந்திருந்தால் நாங்கள் எங்கள் இலக்கை எட்டியிருப்போம். ஆனால், எங்கள் அணி வெற்றி பெற்றிருக்கும் என்று நிச்சயமில்லையே? இம்மாதிரி சந்தர்ப்பங்களில் தங்கள் சொந்த சாதனைகள் நிறைவேறுவதைவிடக் கட்சியின் நலனே பிரதானமானது என்பதை ஆட்டக்காரர்கள் நினைவில் கொள்ள வேண்டும்.

ஹஸாரேயின் இரண்டாவது கிரிக்கெட் நூலில் இதுபோன்று எத்தனையோ சுவையான விஷயங்களைக் காணலாம். விஜய் மர்ச்செண்ட், அமர்நாத், பட்கர், மோடி, அதிகாரி, மஞ்ச்ரேகர் போன்ற சம கால கிரிக்கெட் ஆட்டக்காரர்களைப் பற்றித் தனித் தனிக் கட்டுரைகளில் படம் பிடித்துக் காட்டுகிறார்.

— **பாணன்**

*Cricket Replayed by Vijay Hazare published by Rupa & Co. 15, Bankim Chatterjee St, Calcutta-700012.* விலை ரூ. 15.

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

# சிறுதரத் தொழிலதிபர்களுக்கு

# பெருமளவு உதவி!

நீங்கள் ஒரு சிறுதரத் தொழிலதிபராயிருந்தால் அல்லது அவ்விதம் ஆவதற்கு விரும்பினால், விரைந்து வந்து உங்கள் திட்டங்கள் பற்றி யூகோ பாங்க்கின் எந்த ஒரு கிளையுடனாவது கலந்தாலோசியுங்கள்.

ரூ.10,000 வரையிலான கடன்களுக்கு 8% வருட வட்டியும், ரூ.10,000 லிருந்து ரூ. 25,000 வரை 9% வருட வட்டியும், ரூ. 25,000 முதல் 1,00,000 வரை 10% வருட வட்டியுமே நீங்கள் கொடுக்க வேண்டி வரும். ரூ. 1,00,000க்கு மேலான கடன்கள் பற்றிய விவரங்களுக்கு அருகிலுள்ள எங்களது கிளையுடன் தொடர்பு கொள்ளுங்கள்.

தாங்களே தங்களுக்கு உதவ மக்களுக்கு
லாபகரமாக உதவுகிறது




# யூனைடெட் கமர்ஷியல் பாங்க்

Registered No. M. 4092
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 50 சதம் (தபால் சேவை தனி)

# உள்ளம் கவர் கள்வன்!

உள்ளம் கவர் கள்வன்!
இவருக்குக் கவலையில்லை...
இவருக்குக் கிடைத்துவிட்டன

## விமல்

தரும் துணிகள்

விமல், உங்களுக்கு எப்போதுமே புதுதம்புதிய துணிகளை வழங்குகின்றனர். இணையற்ற புடவைகள்— மனதைக் கொள்ளை கொள்ளும் இலேசான, குளுமை தரும் மென்மையான புடவைகள்.

பாஷன் உலகில் பிரபலமான உடுப்புத் துணிகளும் உள்ளன. அற்புதமானவை! மனங் கவருபவை. கவர்ச்சியான தோற்றத்துக்கு உயிரானவை. ஜக்கார்டு மற்றும் ப்ளெயின் ஷர்ட்டிங்—டெக்ஸ்லீன் கொண்டு தயாரிக்கப்பட்ட இந்த சூட்டிங்குகள் உங்கள் அமைதியான எடுப்பான தனித்தன்மைக்கு அழகூட்டுகின்றன. வூலன் மற்றும் நிட்டெட் ஸ்ட்ரெச் சூட்டிங்குகள் 100% டெக்ஸ்சரைஸ்டு பாலியெஸ்டர்.

எப்போதும் கவர்ச்சியான
துணிகளுக்காக...




Texlene

100% டெக்ஸ்சரைஸ்டு
பாலியெஸ்டர் சூட்டிங்குகள்
வூலன் மற்றும் நிட்டெட்
(ஸ்ட்ரெச்)

C.P.AdS-VF